மூங்கிற் கவையின் உதவியால் தடுமாறி நடக்கும் அவனையும் ஏற்கனவே குமாரசாமி அந்தப் பக்கம் பார்த்திருக்கிறார்.

இப்போது அவன் அவள் தோள்மீது வாஞ்சையோடு சாய்ந்திருந்தான். அவர்கள் உல்லாசமாகச் சின்னஞ்சிறு குறும்புகள் செய்து விளையாடிக் கொண்டிருந்தார்கள். இரண்டு பேருமே காசு கொடுத்துத் தமிழ் சினிமா பார்க்க முடியாவிட்டாலும், அந்த விளம்பரங்களைத்தான் பெரிய பெரிய அளவில் மௌண்ட்ரோடு மத்தியில் பார்க்கிறார்களே! அன்றைக்குக்கூட இப்படித்தான் கதாநாயகன் ஒருவன் கதாநாயகியின் தோள்மீது சாய்ந்து அவள் முகத்தையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான். இந்த விளம்பரக் காட்சியைத் தெருவில் போகும் ஆயிரம் ஆயிரம் ஜனங்கள் கண்ணிமைக்காமல் பார்த்தார்கள்.

இந்த நள்ளிரவில் தங்களையே உற்று நோக்கும் தகப்பனாரையும் பெண்ணையும் பற்றி அந்தப் பிச்சைக்காரத் தம்பதிகளுக்குத் தெரியவே தெரியாது. உலகமே கண்ணை மூடிக் கொண்டு விட்டது என்பது அவர்களுடைய எண்ணம்.

இந்தக் காட்சியை ஒரு நிமிஷத்திற்குமேல் குமாரசாமியால் சகிக்க முடியவில்லை. அப்போதுதான் அங்கு வந்த மாதிரி பாவனை செய்துகொண்டு, வேறு பக்கம் திரும்பிய வண்ணம், ‘‘என்ன ராதா? இன்னுமா படிக்கிறாய்? உடம்பு என்னத்திற்காகும்?’’ என்று கேட்டார்.

ராதாவுக்குத் தூக்கிவாரிப் போட்டது. இருந்தாலும் பெண்ணல்லவா? மின்வெட்டும் நேரத்தில் தன்னைச் சமாளித்துக் கொண்டாள்.

‘‘இன்னும் அரைமணி நேரத்தில் வந்து விடுகிறேன். போய்த் தூங்குங்கள் அப்பா!’’

‘‘நாழியாகிறது; நாளைக்குப் படிக்கலாம் வா!’’ என்றார் தகப்பனார்.

‘‘இல்லை; இன்னும் கொஞ்ச நேரம்...ஒரே பக்கம்!’’

குமாரசாமிக்குக் கோபம் வந்துவிட்டது. ‘‘வருகிறாயா என்ன? பாதி ராத்திரிக்கு மேல் என்ன படிப்பு வேண்டியிருக்

கிறது? இப்படியிருந்தால் நீ உருப்பட்ட மாதிரிதான்!'' என்று கத்தினர்.

மறுநாள் பொழுது விடிந்தது. முதல் வேலையாகக் குமாரசாமி அந்த நொண்டிப் பிச்சைக்காரன் முகத்தில் விழித்தார். அவன் தங்கியிருந்தது அவருடைய இடம். உடனே அதைக் காலி செய்து விட்டு மறுவேலை பார்க்கச் சொன்னர்.

''இங்கே வீடு கட்டப்போகிறேன், உன் குடும்பத்தை வேறு இடத்தில் வைத்துக்கொள்—உம்! புறப்படு; நாழியாகிறது!''

அவனும் அவன் துணைவியும் யாருக்கும் சொந்தமில்லாத ஒரு பொது இடத்தைத் தேடிப் பிடித்துக் கொண்டனர். சர்க்கார் நடைபாதையின் ஓரம் அது. அங்கே யாரும் வீடு கட்டவோ அதட்டிப் பேசவோ முடியாது. போலீஸ்காரர்களும் வீணுகத் தொந்தரவு கொடுக்க மாட்டார்கள்.

அன்றைக்குச் சாயங்காலம் அந்தப் பெண்பிள்ளை, அம்மை வார்த்த முகத்துக்காரி, கண்ட்ராக்டரின் பங்களாப் பக்கம் கையில் மண் கலயத்துடன் வந்தாள். காம்பவுண்டுக்குள்ளே அவருடைய பெண் ராதா பழைய துணி வாங்குபவனிடம் பேரம் பேசிக் கொண்டிருப்பது தெரிந்தது. கிழிசல் துணிகளைப் போட்டுவிட்டு அதற்குப் பதிலாக 'எனுமல்' பாத்திரங்களைப் பண்டமாற்றுச் செய்து கொண்டிருந்தாள் ராதா. சேலைகளும் ரவிக்கைகளுமாய்ப் பத்து பன்னிரண்டு உருப்படிகள் இருந்தன.

பிச்சைக்காரிக்கு இந்தத் துணிகளைக் கண்டவுடன் கொஞ்சம் சபலம் தட்டியது.

காம்பவுண்டுக்குள்ளே வந்து பரிதாபமாய் முகத்தை வைத்துக்கொண்டு ராதாவை ஏறிட்டுப் பார்த்தாள். ராதாவின் கண்களும் அந்த அழகற்ற முகத்தைப் பார்த்தன. பார்த்தவுடன் காரணம் தெரியாத பொருமை ராதாவின் மனத்திற்குள் சூழ்ந்து கொண்டது. சட்டென்று பார்வையைத் திருப்பிக் கொண்டாள்.

"அம்மா! ஒரே ஒரு ரவிக்கைத்துணி...உடம்பை மூட்ற துக்கு வேறே ஒண்ணுமில்லேம்மா."

ராதா தன்னுடைய முகத்தைத் தோளில் இடித்துக் கொண்டாள். அவள் அப்போது பார்த்த பார்வை 'நீ போட்டிருக்கும் அழுக்குத் துணியைக் கழற்றிக் கொடுத்தால் எனக்கு இன்னொரு எனுமல் கரண்டி கிடைக்குமே' என்று சொல்வது போலிருந்தது.

"கொஞ்சம் சோறுச்சும் போடுங்கம்மா!"

"இங்கே ஒண்ணும் தர்மசத்திரம் கட்டிவைக்கல்லே! வேறே எங்கேயாவது போய்ப் பார்."

பிச்சைக்காரி முகம் சுண்டிப்போய்த் திரும்பினாள். ராதா புத்தம் புதுப் பாத்திரங்களில் தன் முகத்தை அழகு பார்த்துக் கொண்டே ஒவ்வொன்றாய் உள்ளே எடுத்து வைத்தாள்.

இரவு நேரம் வந்தது. குமாரசாமி வெளியில் போகும் போது ராதாவை இரண்டாவது மாடியிலேயே படிக்கும்படி சொல்லியிருந்தார். ஆனால் ராதாவா இதை எல்லாம் கேட்டு நடப்பவள்? தகப்பனார் சொன்னதற்காக ஒன்பது மணி வரையில் பொறுத்துப் பொறுத்துப் பார்த்தாள். மனதிற்குள் ஏதோ ஒன்று தவியாய்த் தவித்தது. அவளால் அங்கிருக்க முடியவில்லை. நாலே பாய்ச்சலில் மூன்றாவது மாடியின் கைப்பிடிச் சுவரருகில் நின்றாள்.

பிச்சைக்காரக் குடும்பம் அங்கிருந்து விரட்டியடிக்கப் பட்ட விஷயம் அவளுக்குத் தெரியாது. முதல் விநாடியில் ஒரே ஏமாற்றம். ஆனால் மறுவிநாடி அவள் அவர்களைக் கண்டு பிடித்துவிட்டாள்; இன்னும் நூறு கஜ தூரத்தில், சிமெண்டுத் தரையில், வேறொரு மரத்தடியில் அவர்கள் இருந் தார்கள்—நேற்று இருந்த நிலையைவிட இன்றைக்குக் கொஞ்சம் அதிகம் என்றே சொல்ல வேண்டும்!

'உள்ளத்தைக் கிள்ளி உணர்ச்சியூட்டும்' எட்டணா நாவல்களின் அட்டைப்படம் போல ராதாவுக்கு அந்தக் காட்சி கண்களில் ஒட்டிக்கொண்டது. தந்தையிடம் நேற்

றுப்போல் அகப்பட்டு விழிக்காமல் இருப்பதற்காகத் தயாராய்ப் பாடப் புத்தகத்தைக் கையில் வைத்திருந்தாள்.

அவளுடைய மனம் எப்படியோ இருந்தது. ரசனேயோடு அந்தக் காட்சியை அநுபவித்தாள்.

திடீரென்று பின்னல் இடி இடித்தது. அதைக்கேட்டு அவள் நடுங்கினாள். மலேபோல் அங்கே குமாரசாமி நின்று கொண்டிருந்தார்.

“கழுதை! இதுதானா நீ படிக்கிற லட்சணம்?”

“இல்லேயப்பா?”

“என்ன இல்லே?”—ராதாவின் கையை இறுகப்பற்றிப் பரபரவென்று படுக்கையில் கொண்டுபோய்த் தள்ளினார். போர்வையை இழுத்துப் போர்த்தினார். விளக்கை அணைத்தார்!

“நீ படித்துக் கிழித்தது போதும்! பரீட்சையும் வேண்டாம், மண்ணாங்கட்டியும் வேண்டாம்!”

அன்றைக்கு இரவு தகப்பனாரும் பெண்ணும் சரியாகவே தூங்கவில்லே. தகப்பனாருக்கு அந்த நொண்டிப் பிச்சைக் காரனே மரத்தில் கட்டிவைத்துத் தோலே உறித்து விடலாம் போல் இருந்தது. பெண்ணுக்கோ ஆத்திரம், அவமானம், ஏமாற்றம்.

பொழுது எப்போது விடியும் என்று காத்திருந்தார் குமாரசாமி. விடிந்தவுடன் கையில் வெள்ளிப் பூண்போட்ட பிரம்பை எடுத்துக்கொண்டு அந்த மரத்தடிக்கு நடந்தார். அவர்களேச் சமீபத்தில் கண்டவுடன் அவரது கைப்பிரம்பு வேகமாய்த் துடித்தது. பளீரென்று நொண்டியின் முதுகில் ஒரு அடி வைத்தார்.

“ஐயோ! சாமீ...ஆ!” என்ற அலறல்.

“ஏண்டா, உனக்கு வெட்கமில்லே? உன்னே இங்கே இருக்கப்படாதின்னு சொன்னேனா இல்லேயா?”

அவன் வலி தாளாமல் கத்திக்கொண்டிருந்தான். ஆனால் அந்தப் பெண்பிள்ளே இப்போது பெண் புலியாக மாறி உறுமினாள்.

"அடையாறு ஒன்னோட சொத்தா சாமி? கையை நீட்டி அடிக்க உனக்கு என்ன நாயம் இருக்கு?"

"உனக்கு வெட்கம் மானம் கிடையாதா?" என்று மீண்டும் அவனிடம் கேட்டார் குமாரசாமி.

அவன் பதில் சொல்லவில்லை. முதல் அடியிலேயே அவனுக்குப் பொறிகலங்கிப் போய்விட்டது. பெண்தான் சீறினாள்.

"எதுக்கு சாமி வெக்கம்? நாங்க எங்கேயும் திருடினமா? சுரண்டினமா? யாரோட சொத்தையும் கொள்ளையடிச்சமா?—எதுக்கு சாமி வெக்கம்?"

குமாரசாமி அவளைப் பார்த்துக் கேட்டார்: "நட்ட நடுத்தெருவிலே இந்த அக்கிரமமா செய்யிறிங்க? நீயும் அவனும் கொஞ்சிக் குலாவறத்துக்கு வேறே இடமில்லே?—வெட்கங்கெட்ட நாய்கள்!"

"ஏஞ்சாமி! உனக்கு வெக்கமாயிருந்தா நீ ஒரு குடிசை கட்டிக் குடுக்கிறதுதானே? நீதான் உலகத்துக்கே வீடு கட்டித் தர்றியே?"

கண்ட்ராக்டரின் கைப்பிரம்பு கீழே நழுவியது.

"ஏஞ்சாமி உனக்கு இந்தப் பொறுமை? எங்களுக்கு ஒரு வேளைச் சோறுபோட நாதியில்லே; ஒரு முழத்துணி குடுக்க மனுசரில்லே. கிடைக்கிற ஒரே சுகத்தைக் கண்டு ஏன் இப்படி நீங்க வயித்தெரிச்சல் பட்றீங்க?"

எத்தனையோ பங்களாக்களை மற்றவர்களுக்காகக் கட்டிக் கொடுத்த கண்ட்ராக்டருக்கு, அந்தப் பிச்சைக்காரியின் பதில், ஒரு ஐந்தடுக்கு மாடியே அவர் தலையில் இடிந்து விழுந்து பொடிப் பொடியான மாதிரி இருந்தது.



# முதல் தீபாவளி

---

வாசலில் மாமனூர் வீட்டுக் கார் நின்றது. பள்ளிக்கூடத்திலிருந்து திரும்பிய மூர்த்தி அதைப் பார்த்துக்கொண்டே மலர்ந்த முகத்துடன் வீட்டிற்குள் நுழைந்தான். எதிரே சோபாவில் அவருடைய மைத்துனன் ராகவன் உட்கார்ந்திருப்பது தெரிந்தது.

''இப்போதுதான் வருகிறீர்களா ராகவன்? கோயம்புத்தூரில் எல்லோரும் சுகமா?'' என்று அன்போடு கேட்டுக்கொண்டே சட்டையைக் கழற்றி ஸ்டாண்டில் மாட்டினுன். ராகவன் பதில் பேசவில்லை. அவனுடைய முகம் கோபத்தால் கறுத்திருந்தது.

மூர்த்தி கைகால் சுத்தம் செய்து கொள்வதற்காக முற்றத்திற்குச் சென்றுன். அப்படியே அடுக்களையில் இருந்த தன் சித்தி பார்வதியையும் கவனித்தான். அவள் முகத்திலும் எள் வெடித்தது. அவள் பரபரப்போடு வேலை செய்யும் அளவைக் கொண்டே அவளுடைய கோபத்தையும் அளந்து கொண்டான். வேலை மிகவும் ஜரூராகத்தான் இருந்தது; கோபமும் அசாத்தியமாகத்தான் இருக்கவேண்டும்.

மீண்டும் ஹாலுக்கு வந்து மைத்துனனுக்குப் பக்கத்தில் உட்கார்ந்தான் மூர்த்தி. எந்த இருவரும் தனிமையில் சந்திக்காமல் இருந்தால் நன்றாக இருக்கும் என்று நினைத்தானே அவர்கள்—அவனுடைய சித்தியும் ராகவனும், சந்தித்துக் கொண்டார்கள்; சண்டையும் போட்டுக் கொண்டார்கள் என்றே தோன்றியது.

''ஆலிவர் கோல்ட் ஸ்மித் சொல்லியிருக்கிறுன்; 'மாறுபட்ட அந்தஸ்துள்ளவர்கள் சம்பந்தம் செய்து கொள்ளக் கூடாது; அதனுலே தாழ்ந்த அந்தஸ்துள்ளவர்களுக்குத்தான்

கஷ்டம்' என்று, ஆனால்...'' என்றான் ராகவன். அவன் பேச்சை முடிக்குமுன்பே பார்வதி குறுக்கிட்டாள்.

''அப்படிச் சொன்னவன் வாயிலே அரை வீசைச் சீனி யைக் கொட்டவேணும்'' என்றாள்.

''ஆனால்...கோல்ட்ஸ்மித் சொன்னது தப்பு. அதனால் எங்களைப்போல் உயர்ந்த நிலையிலே உள்ளவர்களுக்குத் தான் அதிகக் கஷ்டம். இப்போது இந்தச் சம்பந்தம் வைத்துக் கொண்டதால் எங்களுக்குத்தான் தொல்லையாக இருக்கிறது'' என்று ராகவன் தன் பேச்சை முடித்தான்.

ராகவனின் சுபாவத்தை மூர்த்தி ஏற்கனவே ஓரளவு தெரிந்துதான் வைத்திருந்தான் என்றாலும் இவ்வளவு மோசமாக அது இருக்குமென்று அவன் சிறிதும் எதிர்பார்க்க் வில்லை. அவன் பேச்சைக்கேட்டு ஒரு கணம் கலங்கிவிட்டான். அதிகமாக நெருங்கிப் பழகவில்லை; இன்னும் புது மாப்பிள்ளை என்ற ஸ்தானத்தில்தான் மூர்த்தி இருக்கிறான். இந்த நிலையில் தன் தங்கையின் புருஷனிடம் ஒருவன் எடுத்த எடுப்பில் இப்படியா பேசுவான்?

ராகவனின் பேச்சில் அகங்காரம் இருந்தது; அலட்சியம் தொனித்தது; விஷம் பாய்ந்தது.

மூர்த்தியின் சுயமரியாதைக்கு ராகவனின் போக்குப் பிடிக்கவில்லை. பதிலுக்கு ஏதோ சொல்ல வாயெடுத்தான். ஆனால் உடனே தன்னை அடக்கிக்கொண்டான். ''பணக் காரர்களுக்குச் சிரமம் வந்தால் பணத்தைப் போட்டு மறைக்கலாம்; எங்களுக்கு வந்தால்தான் தாங்க முடியாது'' என்றாள் பார்வதி.

''இந்த வம்பெல்லாம் வேண்டாமென்றுதான் நான் அப்போதே சொன்னேன். அப்பாவுடைய பிடிவாதத்துக்கு நான் ஆளாக வேண்டியிருந்தது!'' என்றான் ராகவன்.

''நானும் அதைத்தான் அவரிடம் சொன்னேன். அப்பாவும் பிள்ளையும் ஒரே பிடிவாதமாய் இருந்தார்களே, இப்போது தெரிகிறதா?''

''சித்தி, கொஞ்சம் பேசாதிருங்களேன்'' என்று வேதனை யோடு சொன்னான் மூர்த்தி. அவள் நிறுத்திக்கொண்டாள்.

ஆனால் ராகவனிடம் இப்படிச் சொல்லமுடியுமா? அவன் தன்னுடைய குடும்ப கௌரவமே மூர்த்திக்குப் பெண் கொடுத்ததால் கெட்டுப் போய்விட்டது என்னும் தோரணையில் பேசிக்கொண்டு போனான்.

பார்வதி ரோஷக்காரி; ரோஷத்தைப் போலவே வேலையும் இருக்கும். ராகவன் வந்து சரியாக ஒருமணி நேரங்கூட ஆகியிருக்காது. அதற்குள் அவனுக்குச் சுடச்சுடப் பதில் கொடுத்துக்கொண்டே சாயங்காலச் சிற்றுண்டிக்கு ராகவனுக்காகப் பாதாம் அல்வா, பஜ்ஜி, தோசை, காபி இவற்றைச் சுடச்சுடச் செய்து முடித்தாள்.

காபி பலகாரம் மேஜைக்கு வந்தது. "சாப்பிடுங்கள் தம்பி; நடந்ததைப்பற்றிப் பேசவேண்டாம். நடக்கப் போகிறதைக் கவனிப்போம்" என்றாள் பார்வதி.

ராகவன் பலகாரத்தைக் கையால் கூடத் தொடவில்லை.

"சாப்பிடுங்கள் ராகவன்" என்றான் மூர்த்தி.

"பசி இல்லை!" என்றான் ராகவன்.

"கொஞ்சம் சாப்பிடுங்கள்."

"கொஞ்சம்கூடப் பசியில்லை!"

"காபியாவது சாப்பிடுங்கள்."

"ஊருக்குப் புறப்படவேண்டும்; வழியில் கடையில் சாப்பிட்டுக் கொள்கிறேன்" என்று எழுந்தான் ராகவன்.

பார்வதியின் கையில் இருந்த கரண்டி நழுவிக் கீழே விழுந்தது. கடையில் சாப்பிடப் போகிறவனுக்காகவா அவள் இப்படி ஓடி ஓடிப் பலகாரம் செய்தாள்?

மூர்த்தி எழுந்துவந்து ராகவனின் கையைப் பிடித்தான். "முதல்முறை என் வீட்டுக்கு வருகிறீர்கள், ராகவன்! சாப்பிடாமல் போகக்கூடாது. நமக்குள் உள்ள உறவைக் கொஞ்சம் எண்ணிப் பாருங்கள். உங்கள் மனம் புண்படும்படி சித்தி பேசியிருந்தால் அதற்காக மன்னித்துக் கொள்ளுங்கள்."

"மிஸ்டர் மூர்த்தி, உங்களைத் தீபாவளிக்கு அழைப்பதற்காக வந்தேன், இதோ அழைக்கிறேன்: முதல் நாளே வந்துவிடுங்கள்! அப்பா பம்பாய் போயிருப்பதால் இந்த வேலை என் தலையில் விழுந்தது. நளினியின் தொந்தரவுக்காகப் புறப்

பட்டேன்'' என்றான் ராகவன். பிறகு வாசலுக்கு வந்து, ''டிரைவர்!'' என்று கத்தினன்.

''கூப்பிடும் முறை இதுவல்ல, ராகவன்! காப்பியாவது குடித்து விட்டுப்போங்கள். நான் அங்கு வந்து சந்தோஷமாய் உங்களுடன் இரண்டு நாள் தங்க வேண்டாமா?'' என்று பரிவோடு மூர்த்தி கேட்டான்.

''அப்புறம் உங்கள் இஷ்டம்!'' என்று வெடுக்கெனச் சொல்லிவிட்டுக் காருக்குள் தாவி உட்கார்ந்தான். பக்கத்துப் பெட்டிக் கடையிலிருந்த டிரைவர் வேகமாய் வந்து கொண்டிருந்தான். காரின் கதவுச் சத்தம் பலமாகப் படீர் என்று ஒலிப்பதற்கும் கார் உறுமிவிட்டுப் புறப்படுவதற்கும் சரியாக இருந்தது.

கதவைச் சாத்திக்கொண்டு மூர்த்தி சமையல் அறைக்கு வந்தான். ''என்ன சித்தி காரணம்?'' என்றான்.

''பணத் திமிர்! பெருமையைத் தாராளமாய்ச் சொல்லிக் கொள்ளட்டும்; ஆனல் எனக்கெதிரேயே நம்மை அன்னக் காவடிகளாக்கிப் பேசினல் பொறுக்க முடியாது'' என்றாள் பார்வதி.

## 2

பள்ளிக்கூட உபாத்தியாயராக இருப்பதில் உள்ள ஒரே லாபம் முக்கியமான நாட்களிலெல்லாம் தவருது லீவு கிடைப்பதுதான்! ஆங்கிலமும் தமிழும் நிறையப் படித்து விட்டு லட்சியத்திற்காகத் தமிழாசிரியராக இருக்கும் மூர்த்திக்கும் அந்தத் தீபாவளி லீவு கிடைத்தது. லீவுதான் கிடைத்துவிட்டதே தவிர, தீபாவளிக்கு இன்னும் ஒரு நாள் மட்டும் குறுக்கே இருந்தாலும் அது என்னவோ வெகு தூரத்தில்தான் இருந்தது.

மறு நாள் பொழுது விடிந்தால் தீபாவளி. மூர்த்தியின் தகப்பனர் மகாலிங்கம் உள்ளே பார்வதியிடம் இதைப் பற்றிக் காரசாரமாகப் பேசிக் கொண்டிருந்தார். கட்டாயம் மூர்த்தி கோயம்புத்தூர் போய்த்தான் ஆகவேண்டுமென்று வாதம் செய்தார். ஆனல் எப்போதுமே அவருடைய வாதந்

தான் பிரமாதம்; தீர்ப்பு மட்டும் பார்வதியின் கையில்தான்; சமயங்களில் மூர்த்தியின் ஆதரவு கிடைத்தால் அவனுடன் சேர்ந்துகொண்டு தமது ரத்து அதிகாரத்தைப் பார்வதியின் மேல் பிரயோகிப்பார்; கல்யாணச் சமயத்தில் இப்படித்தான் நடந்தது. ஆனால் இப்போது அப்படி இல்லை. சித்தியைப் போலவே மூர்த்தியும் பிடிவாதமாக இருந்தான். அறைக் குள் கவலையோடு உட்கார்ந்திருந்த மூர்த்திக்குப் பார்வதியின் வார்த்தைகள் காதில் விழுந்தன.

"மூர்த்திக்குப் பிரியமிருந்தால் தாராளமாய்ப் போய் வரட்டும்" என அவள் அவனுடைய அப்பாவிடம் சொல்லிக் கொண்டிருந்தாள்.

மூர்த்தியின் கையில் இரண்டு கடிதங்கள் இருந்தன. ஒன்று நளினி எழுதியிருந்தாள். மற்றொன்று அவள் தந்தை நமசிவாயம் பம்பாயிலிருந்து எழுதியிருந்தார். இரண்டும் நேற்று வந்த கடிதங்கள். பம்பாய்க் கடிதத்தில் அவசியம் அவனைக் கோவைக்குப் புறப்பட்டு வரச்சொல்லி எழுதி இருந் தது. தீபாவளியன்று காலை மெயிலில் தாமும் அங்கு வந்து சேருவதாக மாமா குறிப்பிட்டிருந்தார்; அப்படித் தவறினால் காலை பத்தரை மணிக்கெல்லாம் அங்கு வரும் விமானத்தில் வந்துவிடுவதாய் எழுதி இருந்தார். நளினியின் கடிதத்திலும் அவளுடைய அன்பு நிறைந்த அழைப்புத்தான் இருந்தது. ராகவன் அவளிடம் இங்கு நடந்த ஒன்றையும் சொல்ல வில்லை என்பதையும் அவள் கடிதத்திலிருந்து தெரிந்து கொண்டான். இது பெரிய ஏமாற்றமாக இருந்தது.

ராகவன் முதல் முதலாக மூர்த்தியைச் சந்தித்தபோதும் அலட்சியமாக நடந்து கொண்டான்; கல்யாண சமயத்திலும் தன்னுடைய சிரத்தையின்மையை வெளிப்படையாகவே காட்டிக்கொண்டான். இப்போதோ மூர்த்தியை விலைக்கு வாங்கிவிட்டதாகவே எண்ணம்! பணத்தினால் எதையும் சாதிக்கலாம் என்ற நினைவுள்ளவன் அவன். பெண்ணும் இங்கே இருக்கிறாள்; பொருளும் அந்தஸ்தும் இருக்கின்றன.

இந்த நினைவுகள் மூர்த்திக்கு வந்தபோது அவனால் அவ மானம் தாங்க முடியவில்லை. மூர்த்தி அப்படி ஒன்றும் ஏழை

யும் அல்ல. போதுமான எல்லாச் செல்வங்களும் அவனிடமிருந்தன. அப்படியே ஏழையாக இருந்தால்தான் என்ன? கோடீசுவரர்கள் ஏழைகளின் ஏழ்மைப் புண்ணில் கோலிட்டு விளையாடுவதில் என்ன இன்பம் காணுகிறார்கள்?

அங்கே ராகவன் இருப்பான்; அவன் மனைவியும் குழந்தைகளும் இருப்பார்கள். நளினிக்குத் தாய் இல்லை. மருமகனின் அருமையை உணரக்கூடியவள் மாமிதான். அவளும் இல்லை; மாமாவும் பிறகுதான் வருவார். அந்த வீட்டில் என்ன வரவேற்பை எதிர்பார்க்க முடியும்? ஆனால்...ஆனால்...அவள் இருப்பாளே! அவள்! அவளுக்குத் துணையாக அவளுடைய ஆசையும் அன்பும் காதலும் இருக்குமே.

ராகவன் கோபமாய் ஊருக்குப் புறப்பட்டபோது சொன்ன கடைசி வார்த்தைகளை மட்டும் மூர்த்தி மறக்கவே இல்லை. "நளினியின் தொந்தரவுக்காகப் புறப்பட்டேன்."

புயலுக்கு மத்தியில் தென்றலாய் வீசிக் கொண்டிருந்தன இந்தச் சொற்கள். கடிதத்திலும் அவள் அன்பையெல்லாம் கொட்டி எழுதியிருந்தாள். 'பள்ளிக்கூடம் விட்ட மறுநாள் காலை இங்கு இருக்கவேண்டும். இல்லாவிட்டால்...அப்புறம்!' என்று முடித்திருந்தாள்.

நேற்றே மூர்த்தி அவளுக்கு விவரமாகப் பதில் எழுதி விட்டான். கண்ணியமான வார்த்தைகளில் அவளுடைய அண்ணா நடந்துகொண்டவிதம்பற்றிக் குறிப்பிட்டு, "எனக்கு ஒன்றும் புரியவில்லை. இந்தத் தீபாவளிபற்றி நான் எத்தனையோ இன்பமாக எண்ணியிருந்தேன். நாம் இருவரும் ஒன்றாக மகிழும் முதல் திருநாள் அல்லவா இது? ஆனால் இந்த நிலையில் நீ என்னை அங்கு வரச்சொல்லுகிறாயா? உனக்குச் சரியென்று தோன்றினால் தந்தி கொடு; இல்லாவிட்டால் தீபாவளி சென்று விடும். நாம் இருப்போம்!"

தந்தி வரவில்லை. தந்தி அப்படியே வந்தாலும் போய்ச் சேர நேரம் இல்லை. அவளுக்கு இப்படிக் கடிதம் எழுதினது சரிதானா இல்லையா? அக்கறை உள்ளவளானால் ஏன் தந்தி கொடுக்காதிருக்கிறாள்?

# 3

ரெயில் சிநேகிதம் என்று சொல்லுவார்களே அந்தச் சிநேகிதந்தான் இப்படிப்பட்ட பெரியஇடத்துச் சம்பந்தத்தை மூர்த்திக்குக் கொண்டுவந்து கொடுத்தது.

மூர்த்தி ஓழிந்தவேளைகளில் தமிழில் கவிதைகளும் எழுதிக் கொண்டிருந்தான். அவனுடைய பெயர் வேகமாக எங்கும் பரவிக்கொண்டிருந்தது. கோவையிலிருந்து ஒரு சினிமாக் கம்பெனிக்காரர்கள் அவனைத் தங்கள் படம் ஒன்றுக்குப் பாட்டு எழுதிக் கொடுப்பதற்காக அழைத்திருந்தார்கள். பகலெல்லாம் நிறைய வேலை இருந்ததால், இரவில் நன்றாகத் தூங்கிக் கொண்டு போகலாமென்று தஞ்சாவூரிலிருந்து கோவைக்கு ரெயிலில் முதல் வகுப்பில் புறப்பட்டான். திருச்சி ஜங்ஷனில் நமசிவாயம் வந்து சேர்ந்தார். அவர் மட்டும் தனியாகத்தான் வந்தார்.

"பிரயாணம் இன்றைக்குச் சுகமாக இருக்கும். எனக்குத் தனியாகப் போகவும் பிடிக்காது; நாலு பேருடன் சேர்ந்து போகவும் பிடிக்காது. உங்களைப்போல ஒருவர் கொஞ்சம் பேச்சுத் துணைக்கு இருந்தால் போதும்" என்று பேச்சை ஆரம்பித்தார் பெரியவர்.

'பேச்சுத் துணைக்கா? நான் ஆசையோடு தேடிவந்த தூக்கம் என்ன ஆவது?' என நினைத்துக்கொண்டான் மூர்த்தி. ஆனால் மரியாதை என்று ஒன்று இருக்கிறதே!

அவன் எதிர்பார்த்ததைவிட அதிகச் சுவாரஸ்யமாகப் பெரியவர் பேசினார். அவனை உன்னிப்பாகக் கவனித்தார். அவனைப் பற்றிய விவரமெல்லாம் தெரிந்துகொண்டார். கடைசியாக அவர் தூக்கமாத்திரை ஒன்றைவாயில்போட்டுக் கொண்டு குறட்டை விட்டபோது இன்னும் கொஞ்சம் அவர் பேசியிருக்கலாம்போல் மூர்த்திக்குத் தோன்றியது.

ஜங்ஷன் வருவதற்கு முன்பே பெரியவர் எழுந்து மூர்த்தியையும் எழுப்பினார். கட்டாயம் தம்மோடு வீட்டிற்கு வந்து காலை காபி சாப்பிட்ட பிறகுதான் ஸ்டூடியோவுக்கு அவன் போக வேண்டும் என்றார். மூர்த்தியும் ஒப்புக் கொண்டான்.

அவருக்காக ஜங்ஷனில் காத்திருந்த காரில் இருவரும் வீட்டிற்கு வந்தார்கள்.

பெரியவரின் பெரிய பங்களா அறையில் மூர்த்தி மட்டும் தனியே உட்கார்ந்திருந்தான். பெரியவர் மிகவும் பெரியவர் தாம் என்பதை அந்தப்பங்களாவைப் பார்த்தவுடன் தெரிந்து கொண்டான். படிக்கட்டில் படபடவென்று வேகமாகச் சத்தம் கேட்டது. அறைக் கதவுகள் படீரென்று உள்ளே திறந்தன.

"வாங்க அப்பா!" என்று செல்லமாக அழைத்துக் கொண்டே குதித்தோடி வந்து நின்ருள் ஒரு குமரி.

ஐம்பது வயசு அப்பாவுக்குப் பதிலாக இருபத்தைந்து வயசுகூட நிரம்பாத இளைஞன் மூர்த்தி அங்கு நின்ருன்!

அவள் முகம் குப்பென்று சிவந்தது. அகலத் திறந்த விழிகள் தரையைப் பார்த்தன. ஓடிவந்தவேகம் இன்னும் அடங்கவில்லை. நிதானமாகத் திரும்பிப் போகப் பார்த்தாள். அதற்குள் அவள் அப்பாவே அங்கு வந்துவிட்டார்.

"இவர் தாம் மூர்த்தி. இளம் கவிஞர். சினிமாவுக்குப் பாட்டு எழுதிக் கொடுப்பதற்காக இங்கே வந்திருக்கிருர்" என்று அறிமுகப்படுத்திஞர்.

"என்மகள் நளினி—இன்டர் படிக்கிருள். மார்ச்சு மாதம் உடம்பு சுகம்இல்லாதிருந்ததால் செப்டம்பர் பரீக்ஷை எழுதப் போகிருள்" என்று அவளைப்பற்றியும் சொன்ஞர்.

"உங்கள் பாட்டுக்களை நிறையப் படித்திருக்கிறேன். ரேடியோவிலும் அடிக்கடி பாடுகிருர்கள். சினிமாவுக்குக் கூட எழுதப்போகிறீர்களா?" என்று ஆனந்தத்தோடு கேட்டாள். சினிமா ஸ்டூடியோவுக்குள்ளே தேவலோகத்திலிருந்து இறங்கி வந்தவர்கள்தாம் நடமாடுகிருர்கள் என்று நினைக்கும் லக்ஷக் கணக்கானவர்களில் அவளும் ஒருத்தி. மூர்த்தியை அவள் பார்த்த அந்தப் பார்வை அதைச் சொல்லியது.

"பாட்டுப் பைத்தியம், ஆட்டப் பைத்தியம், சினிமாப் பைத்தியம்..." என்ருர் நமசிவாயம் தம் மகளைப் பற்றி.

"முதலில் அப்பா பைத்தியம்!" என்றான் மூர்த்தி. அவர் சிரித்துக் கொண்டார்; அவள் நாணிக்கொண்டாள்.

"ஒரு தரம் போய் 'ஷூட்டிங்' பார்க்க வேண்டும் அப்பா" என்றாள் நளினி.

"ஒருதரம் என்ன? ஒரு வாரம் ஸ்டூடியோவில் தங்குகிறேன். பல தடவைகள் பார்க்கலாம்!" என்றான் மூர்த்தி. உண்மையான காதல் ஒரு கணத்திற்குள்ளேகூடப் பிறக்கலாம். அப்படிப் பிறந்த காதல் வளர்வதற்கு ஒரு வாரத்தில் எத்தனை லக்ஷம் கணங்கள் இருக்கின்றன!

சினிமா ஸ்டூடியோவில் படம் எடுத்துக் கொண்டிருந்தார்கள். அழகான காதற் காட்சி. இன்பக் கனவுகளை மலர வைக்கும் பாட்டு ஒன்று பின்னணியில் காதலின் போதையோடு ஒலித்தது. மூர்த்திக்குப் பக்கத்தில் நின்ற நளினி அந்தப் பாட்டில் தன்னைப் பறிகொடுத்து நின்றிருந்தாள். பாட்டு முடிந்தது. வேஷக் காதலர்கள் மறைந்தார்கள். ஆனால் நளினி தன் நினைவை அடையவில்லை.

"நீங்கள் எழுதிய பாட்டுத்தானே இது?" என்றாள் மூர்த்தியிடம். அப்போது அங்கே யாரும் இல்லை. அப்பா எங்கோ வேறு பக்கம் நின்றுகொண்டிருந்தார்.

"ஆமாம்!" என்றான் மூர்த்தி.

"எப்படித்தான் இதை எழுதினீர்களோ!"

"சொல்லட்டுமா?"

"சொல்லுங்கள்!" என்று புன்னகையுடன் நளினி தலையசைத்தாள்.

"உன்முகத்தை முதல் முதலாகப் பார்த்தவுடன் எழுதிய பாட்டு இது" என்றான்.

அப்போது அவர்கள் பார்த்துக்கொண்ட பார்வையைச் சினிமாக்காரர்கள் படம் பிடித்திருந்தால் மிகப் பிரமாதமாகத் திரையில் அது ஓடும். ஆனால் அதை நமசிவாயம் மட்டிலுந்தான் கவனித்தார். உடனே ஆகவேண்டியதைச் செய்து கல்யாணத்தையும் முடித்தார்.

கல்யாணத்திற்குக் குறுக்கே நின்ற முதல் பேர்வழி ராகவன். அந்தஸ்துக் குறைந்துவிட்டது என்று முணுமுணுத்

தான். 'காதலாவது கத்திரிக்காயாவது! எல்லாம் சுத்தப் பைத்தியக்காரத்தனம்' என்றான். அவனைப்போலவே மூர்த்தி யின் சித்தியும் கொஞ்சம் குறைப்பட்டுக் கொண்டாள்— அதிகப் பணக்கார இடத்திலிருந்து மருமகள் வந்தால் மாமி என்ற உயர்ந்த ஸ்தானத்தின் மாற்றுக் கொஞ்சம் குறைந்து விடுகிறதல்லவா?

கல்யாணம் முடிந்தது. ஆனால் அவர்களுடைய காதலுக் குக் குறுக்கே நளினியின் செப்டம்பர் பரீக்ஷை நின்றது. இப் போது செப்டம்பரும் முடிந்து, அக்டோபரும் தீர்ந்து தீபா வளியை அழைத்துக்கொண்டு நவம்பர் வந்துவிட்டது. தீபா வளிக்கு வரும்போது அவளை அழைத்துக்கொண்டு தஞ்சாவூர் போகலாமென்று முன்பே நமசிவாயம் சொல்லியிருந்தார்.

## 4

ரயில் தன்னுடைய வழக்கமான வேகத்தில் குளித்தலை யைத் தாண்டிக் கரூர்ப் பக்கம் போய்க் கொண்டிருந்தது. இரண்டாம்வகுப்புப் பெட்டியில் கோயம்புத்தூர்ப் பிரயாணி யாக மூர்த்தி சாய்ந்து கொண்டிருந்தான். கண்கள் உறக்க மின்றிச் சிவந்திருந்தன. கிராப்புத் தலை கலைந்து கிடந்தது. அவன் வெளியே தனக்கு எதிராக ஓடும் தந்திக் கம்பிகளைப் பார்த்துக் கொண்டிருந்தான். அவைகள்தாம் அவனுக்கு நளினிடயிடமிருந்து ஒரு தந்தியைக் கொண்டுவர மறுத்து விட்டன. அவ்வளவு விவரம் தெரியாத சிறுபிள்ளையா அவள்? வரச்சொல்லி ஒரு தந்தி அடிக்கவில்லையே!

நள்ளிரவில் தஞ்சாவூரிலிருந்து புறப்பட்டான். சித்தி அவன் புறப்படுவதைக் கண்டு வியப்படைந்தாள். ஆனால் தடுக்கவில்லை. இப்போது பொழுது விடியும் நேரமாகி விட்டது. கீழ்வானம் வெளுத்துவிட்டது. கோவை போய்ச் சேருவதற்குள் பொழுது சாய்ந்துவிடும். ஈரோடு ஜங்ஷனில் மூன்று மணி நேரம் காத்துக்கிடக்க வேண்டும்.

எப்படிப் போவது? ராகவனிடம் எப்படி முகம் கொடுத் துப் பேசுவது? மாமனார் வந்திருப்பாரே, அவருக்கு என்ன பதிலைச் சொல்வது? நளினியிடம் எப்படி நடந்து கொள்வது?

மதியாதார் வாசலை மிதித்துத்தான் ஆகவேண்டுமா? வேறு வழி இல்லையா? மூர்த்தி அதிகமாகக் குழம்பிப் போயிருந் தான். எது சரி, எது சரியில்லை என்று நிதானிக்கக்கூடிய நிலை அவனுக்கு இப்போது இல்லை. எல்லாம் அவள், அவள், அவள் மயம்தான்.

கல்யாணம் ஆகி ஐந்து மாதங்கள்வரை அவளைப் பிரிந் திருந்தான். உண்மைதான். ஆனால் இனிமேல் ஐந்து நிமிஷங் கூட அவளை விட்டுப் பிரிந்திருக்க முடியாது. எத்தனை எத்தனையோ தீபாவளிகள் அவள் இல்லாமல் கழிந்திருக் கின்றன. நளினி என்ற ஒருத்தி இந்த உலகில் இருப்பது கூடப் போன தீபாவளியின்போது மூர்த்திக்குத் தெரியாது. ஆனால் இந்தத் தீபாவளிக்கு அவள் பக்கத்தில் இருந்துதான் ஆகவேண்டும்; இன்றைப் பொழுதுக்குள் அவளைப் பார்த்துத் தான் ஆகவேண்டும். மானம், அவமானம், சுயமரியாதை எல்லாம் அப்புறம்...அவளைக் கண்ட பிறகு.

மாயனூர் ஸ்டேஷனில் வண்டி நின்றது. அடுத்த தண்ட வாளத்தில் எதிரே போகும் பாஸஞ்சர் ஒன்று வந்து நின்றது. மூர்த்தி அந்த வண்டியைக் கவனித்தான். நன்றாகக் கவனித்தான். உற்றுப் பார்த்தான். கண்களைத் துடைத்துக் கொண்டு மீண்டும் நோக்கினான். அவன் கனவு காணவில்லை.

மூன்றாம் வகுப்புப் பெண்கள் வண்டியில் நளினி உட் கார்ந்திருந்தாள். அலங்காரங்கள் எதுவும் இல்லாமல் சாதாரணப் புடவையை உடுத்துக்கொண்டு உட்கார்ந்திருந் தாள். அவளும் பார்த்துவிட்டாள்.

"அத்தான்!"

கனவுக்கன்னி இத்தனை உணர்ச்சியோடு கூப்பிட மாட்டாள்.

"நளினி!"

வண்டியிலிருந்து தாவிக் கீழே இறங்கினாள். கையில் சிறு தோல் பெட்டி இருந்தது.

மூர்த்தியின் வண்டி மெதுவாக நகரத் தொடங்கியது. அவளுடைய கரத்தைப் பற்றி உள்ளே இழுத்தான் மூர்த்தி.

நளினி வேகமாய் வந்து மெத்தையில் விழுந்தாள். வண்டி கரூரை நோக்கிப் புறப்பட்டது.

"ஏன் நளினி தந்தி கொடுக்கப்படாதா?"

"உங்களை மதிக்காத இடத்திற்கு வரச் சொல்ல மனம் இல்லை; எனக்கும் அங்கு இருக்கப் பிடிக்கவில்லை."

"நளினி?..."

"அத்தான்!"—அவள் அவனுடைய கரத்தைப் பற்றினாள். "இன்றைக்கு உங்களைப் பார்க்காமல் இருந்தால் என் நெஞ்சு வெடித்துப் போயிருக்கும் அத்தான்!" என்றாள்.

இருவர் நெஞ்சுகளும் ஒன்றாயின. கரூரில் ஒரு ஹோட்டலில் அவர்களுடைய முதல் தீபாவளி இன்பமாக நிறைவேறியது. வேப்பமரத்தடியில் மண்சட்டிகளுடன் குடித்தனம் நடத்திய ஓர் ஏழைக் குடும்பத்திற்கு, மூர்த்தி தம்பதிகளின் அன்பளிப்பாகப் புதுத்துணிகளும் பணமும் அன்றைக்குக் கிடைத்தன.



# மனிதர்கள்

---

குருட்டுப் பிச்சைக்காரன் வையாபுரிக்கு அன்றைய பொழுது விடிந்தது—'அவன்தான் குருடனாயிற்றே, அவனுக்குப் பொழுது விடிந்தால் என்ன? பொழுது போனால் என்ன? எல்லாம் ஒரே இருட்டுத்தானே' என்கிறீர்களா? சரி; அப்படியே கொஞ்ச நேரம் நினைத்துக் கொள்ளுங்கள். திருச்சினாப்பள்ளிக்கடுத்த கீழ்ச் சிந்தாமணிக் காவேரிக் கரையில் சில பாழடைந்த மண்டபங்கள் இருக்கின்றன. அந்தக் கருங்கல் மண்டபம் ஒன்றில் அவன் நான்கு நாட்களாகக் குடியேறி இருந்தான். அதற்கு முன்பு அவனுக்கென்று தனி இடம் தேவையாக இல்லை. திறந்த வெளிகளிலோ, ஒட்டுத் திண்ணைகளிலோ, முனிசிபாலிட்டியார் பெரிய மனசு செய்து தெரு ஓரங்களில் போட்டு வைத்திருக்கும் சிமெண்டுப் பெஞ்சிகளிலோ, முனிசிபாலிட்டியார் பெரிய மனசு செய்து தெரு ஓரங்களில் போட்டு வைத்திருக்கும் சிமெண்டுப் பெஞ்சிகளிலோ இரவைக் கழிப்பான். அப்போதெல்லாம் அவன் ஒற்றைக் கட்டை.

நான்கு நாட்களாக அவன் குடியும் குடித்தனமும் ஆகிவிட்டான். அவனை அப்படி ஆக்கி வைத்தவள் தெய்வானை. அரிசிப் பஞ்சத்தின் மகத்துவத்தாலும் மானமாய்ப் பிழைக்கக்கூடிய வழிகள் அத்தனையும் இந்தப் பாழாய்ப்போன நாட்டில் செத்துப்போனதாலும், ஆதரிக்க ஒரு ஆண்பிள்ளை கிடைக்காததாலும் அவள் பிச்சைக்காரியாகி நம்முடைய கதாநாயகன் வையாபுரியின் கையைப் பிடித்தாள்.

இந்த நான்கு நாட்களாகத்தான் அவனும் அவளும் புருஷன் மனைவி.

கோலே ஊன்றி, தட்டுத் தடுமாறி அலேந்து, தனியாகப் பிச்சை எடுத்துக் கொண்டிருந்த வையாபுரிக்கு, இப்போது தோளேப் பிடித்துக் கொள்ளச் சொல்லி வழிகாட்டுவதற்கு ஒரு பெண் அகப்பட்டாள். பிச்சைக்காரப் பயலுடன் கட்டுக் குலேயாத தேகத்தோடு 'வயசுக் குட்டி' ஒருத்தியும் கூட வருகிருள் என்ருல், பிச்சைபோடுகிற தர்மப் பிரபுக்களின் மனம் கொஞ்சம் தாராளமாக இளகத்தானே செய்யும்?—அவனுக்கு இந்த நான்கு நாட்களாக அதிக வரும்படி வந்தது.

அவளுக்கும் கொடுத்துத் தானும் தின்ருன்; கொஞ்சம் கிழிசல் துணியில் முடிந்தும் வைத்தான்.

"இன்னிக்கு நான் உன்னேடுகூட வர முடியாது; நீ மட்டும் போயிட்டு வா" என்ருள் தெய்வானே.

"ஏன்?" என்ருன் குருடன்.

"உடம்பெல்லாம் ஒரே வலியா வலிக்குது;—நீ சுத்த மோசம்!" என்று சொல்லிச் சிரித்தாள்.

அவன் புரிந்து கொண்டான்; அவனுக்கு அந்த இரவின் நினேவு வந்தது; அவனும் சிரித்தான்.

"சரி, நான் போயிட்டு வாரேன். நீ நல்லாப் படுத்துத் தூங்கு. உடம்பைப் பத்திரமாப் பார்த்துக்கோ!"

"ஆமா, வந்து..." எதையோ சொல்ல ஆசைப்படுகிறவள்போல் இழுத்தாள் தெய்வானே.

எழுந்தவன் மீண்டும் கீழே உட்கார்ந்தான்: "என்ன?"

"என்னேட ரவிக்கை கிழிஞ்சு போச்சு; எனக்கு ஒரு புது ரவிக்கை வேணும்" என்று செல்லமாய்க் கொஞ்சிஞள் அவள். "வேணுமின்னுப் பாரேன்!" என்று அவனுடைய வலது கையை எடுத்துத் தன் தோளில் போட்டுக் கொண்டாள். அவனுக்கு அவளுடைய ஸ்பரிசம் பேரானந்தமாக இருந்தது. அவனுடைய கை பட்ட இடமெல்லாம் அந்தத் துணி கிழிந்திருப்பதை உணர்ந்தான்.

"ராத்திரிக்கு வாரப்போ உனக்கு ஒரு புது ரவிக்கை வாங்கியாறேன்."

அவள் கேலியாகச் சிரித்தாள்.

"என்ன?" என்றான் குருடன்.

"உனக்கு எப்படித் துணி எடுக்கத் தெரியும்? என்னோட அளவுக்குச் சரியாக எடுக்கவேண்டாமா? கடைக்காரன் உன்னை ஏமாத்திப்புடுவானே!"

"சரிதான் தெய்வானை; உனக்கு எவ்வளவு காசு வேணும்?"

"ஒரு ரூவா இருந்தாப் போதும்."

வையாபுரியின் மனம் 'திக்' கென்றது. ஒரு ரூபாயாமே! அறுபத்துநாலு புண்ணியாத்மாக்கள் காண்பித்த இரக்கத்தின் மாபெரும் சொத்தல்லவா அது? என்ன செய்வது? தெய்வானையே தன் வாயைத் திறந்து கேட்டு விட்டாள். புதுப் பெண்டாட்டி! அவன் அவளுடைய இளமையை எண்ணிப் பார்த்தான்; சென்றுபோன இரவை எண்ணிப் பார்த்தான். பேசாது முடிச்சை எடுத்து அவிழ்த்துத் தொட்டுப் பார்த்துப் பணத்தை எண்ணினான்; ஒரு ரூபாயும் ஓரணாவும் இருந்தன.

"இந்தா!"—ஒரு ரூபாயை அவளிடம் கொடுத்துவிட்டு அந்த ஓரணாவுக்கு ஒன்பது முடிச்சுகள் போட்டுப் பத்திரப் படுத்தினான்.

அவள் தன் முகத்தில் புன்னகை தவழ அந்தப் பணத்தை வாங்கிக் கொண்டாள். பிறகு தன் மடியைப் பார்த்தாள். ஒரு நல்ல ரவிக்கை கிடந்தது. கொஞ்சமும் கிழியாத அவளுடைய வேறொரு ரவிக்கை அது. அதைப் பார்த்தவுடன் ஒரு பெருமூச்சு விட்டாள். துணி இருக்கும்போதே இல்லையென்று சொல்லி ஏமாற்றவேண்டியிருக்கிறது. இன்னும் எப்படியெல்லாம் ஏமாற்றவேண்டியிருக்குமோ?

## 2

தெரு வழியே நடந்த குருடனுக்கு, என்னவோ மறந்துபோன ஞாபகம் ஒன்று வந்து உருவமில்லாமல் அவனுடைய நெஞ்சில் குறுகுறுத்தது.

சற்று நிதானித்தான். யோசித்துப்பார்த்தான். உருவம் இல்லாதிருந்த அந்த நினைவு உருவம் பெற்றது. தனக்குள் சிரித்துக் கொண்டான்.

அந்தச் சமாசாரத்தைப் பொழுது விடிந்தவுடன் தெய்வானையிடம் சொல்ல வேண்டுமென்று இருந்தான். அதைச் சொல்ல இரவு முழுவதும் துடிதுடித்தான். ஆனால் பொழுது விடிந்த பிறகும் அவளிடம் அதைச்சொல்லவில்லை. பிச்சைக் குப் புறப்படும் சமயம் அதைச் சொல்லவேண்டிய அவசியம் வந்தது. ஆனால் அடக்கிக் கொண்டான்.

ரகசியத்தையெல்லாம் பகலிலா ஒரு பெண் பிள்ளையிடம் சொல்லுவது? ராத்திரி இருட்டில் காதும் காதும் வைத்தாற் போல் சொல்லவேண்டிய அந்தரங்கமல்லவா அது! அதைக் கேட்டவுடன் அவளும் சிரிப்பாள்; அவனும் சிரிப்பான். இரண்டு பேரும் விழுந்து விழுந்து சிரிப்பார்கள்.

விழுந்து விழுந்து சிரிக்கும் பேரானந்தத்தை அவன் கற்பனை செய்துகொண்டு நடக்கும்போது, உண்மையிலேயே அவன் கல் தடுக்கிக் குப்புற விழவேண்டிய அவசியம் வந்து விட்டது. நல்லவேளையாக நடுத்தெருவில் கையை ஊன்றிக் கொண்டான். கீழே நழுவி விழுந்த கோலைத் தடவிப் பார்த்து எடுத்துக்கொண்டு, நினைப்பதை விட்டுவிட்டு மேலே நடந்தான். நடையில் ஏனோ ஒரு நிதானம் இருந்தது.

காலைப் பொழுதுகளில் வழக்கமாக அவன் தெருக்களில் அரிசிப் பிச்சைக்காக வீடுவீடாக நின்று கத்துவான். பழைய சோறு கிடைத்தால் மண்சட்டியில் பெற்றுக்கொள்வான், மத்தியானத்திற்கப்புறம் கிடைத்த சோற்றைத் தின்று விட்டு, சிறிது நேரம் மரத்தடியில் களைப்பாறிய பிறகு, கார் ஸ்டாண்டு, காபி ஹோட்டல், கடைவீதி இங்கெல்லாம் சுற்றிக் காசு கேட்பான். விளக்கு வைத்த பிறகு 'வீடு' திரும்புவான். இது அவனுடைய தினசரி வேலைத் திட்டம்.

காலையில் அரிசிப் பிச்சை;—

மத்தியானம் சாப்பாடும் இளைப்பாறலும்;—

மாலையில் காசுப் பிச்சை;—

இரவு வேளையில் பிச்சையின் பலனையும் பிறந்ததன் பலனையும் அநுபவித்தல்;—

காலேவேலை முடிந்தது. அவ்வளவு சுவராஸ்யமாக இல்லை. வீசம்படி அரிசிகூட அவனுடைய தகரக் குவளையில் குலுங்கக் காணேம். முன்னூறு வீடுகளுக்குமேல் ஏறி இறங்கிவிட்டான்.

"கண்ணுத் தெரியாத குருடனம்மா! பாவியிலும் மகாப் பாவியம்மா!—தர்மதாயே! கண்ணில்லாத கபோதி! நீங்க பெத்துப் பெருகி மகராசியா வாழணும்!" என்று வசனத்திலும், கதையிலும், வசன கவிதையிலும் வீட்டு அரசிகளின் நெஞ்சங்களே உருக்கிப் பார்த்தான். பெற்றுப் பெருகி, அதனுல் வாழத் தெரியாது தவிக்கும் பஞ்ச காலத்து அரசிகளுக்கு நெஞ்சங்கள் இருந்தாலல்லவோ அவை உருகுவதற்கு? அரிசிவிலேயைக் கண்டவுடன்தான் அவை செத்து விட்டனவே!

ஆட்சியைத் திட்டினுர்கள் சிலர்; அரிசியைப் பதுக்கி விற்கும் அயோக்கியர்களேத் திட்டினுர்கள் சிலர். ஆனல் அப்படித் திட்டிய அரைப் பட்டினிக்காரர்களில் எவரும் முழுப் பட்டினிக்காரக் குருடனேக் கவனிக்கவில்லை.

மத்தியானம் ஒரு மரத்தடியில் முடிந்தது. நீராகாரமும் குழாய்த் தண்ணீரும் சேர்ந்து அவன் வயிற்றை நிரப்பின. சற்றுக் களேப்பாற விரும்பினுன். அவனுடைய கால்கள் அவனேக் கெஞ்சின; வலி தாங்க முடியாது அவை மெள்ளமாய் அழுவதுபோல் இருந்தன. ஆனல் அன்றைக்கு அவன் அந்தக் கால்களுக்கு ஓய்வு கொடுக்க விரும்பவில்லை. இரண்டு 'ஆத்மா'க்களுடைய பசியை விரட்டியாக வேண்டுமல்லவா? ஆற்றங்கரை மண்டபத்தில் புதுரவிக்கைக்காரி அவனுக்காகவும் அவனுடைய பிச்சைச் சோத்துக்காகவும் காத்திருப்பாளே!

காலணுக்கள் கொஞ்சம் தாரளமாகவே அவனுடைய தகர டப்பாவில் விழுந்தன. முப்பது முப்பத்தைந்து செப்புக் காசுகளுக்குக் குறையாது. அவற்றைக் கவனமாக எண்ணிப் பார்த்துப் பதினறு காசுகளேத் தனியே எடுத்துத் தன்னுடைய பழைய ஒரணுவுடன் சேர்த்து முடித்தான்.

"இந்தாப்பா!" என்ற ஒரு குரல் கேட்டது.

அந்தப் பக்கம் திரும்பினுன்.

அங்கு ஒரு மைனர்ப்பேர்வழி நின்று கொண்டிருந்தான். அவனுடைய கருத்த உடம்பு மெல்லிசாக அவன் போட்டுக் கொண்டிருந்த மல் ஜிப்பா வழியாக வெளியே தெரிந்தது; கிராப்புத் தலையைப் பின்புறம் சீவிக் கொண்டிருந்தான். கழுத்தில் ஒரு சிவப்பு 'மப்ளர்' துணி சுற்றிக் கொண்டிருந் தான். இடது கையில் பாதி குடித்த பீடித்துண்டைப் புகை யோடு வைத்திருந்தான்.

"இந்தா, நாலணுவா இருக்கு; காலணுப் போகப் பாக்கி கொடு!" என்ருன் அந்த மைனர்.

பிச்சைக்காரன் பதினைந்து காலணுக் காசுகளை இடது கையில் எடுத்தான். வலது கையில் அந்த நாலணுவை வாங் கித் தடவிப் பார்த்தான். மேலே சொருகிக் கொண்ட விழி களோடு தன் முகத்தைக் கீழே தொங்கவிட்டான்.

"என்னப்பா, கண்ணு தெரிஞ்சவனுட்டம் காசை அப் படிப் பாக்கிறியே! உங்கிட்டே ஏமாத்தவா வந்தேன்?—எங்கே, உன்னோடே வருவாளே, அந்தக் குட்டி எங்கே?"

குருடன் பதில் பேசவில்லை. அதற்குள் அந்த மைனர் சில் லறையைப் பெற்றுக்கொண்டு வேகமாக நடந்தான். குருட னுக்கு அந்தச் சமயம் என்ன தோன்றியதோ தெரியவில்லை.

"சாமி! ஐயா, இந்தக் காசு வந்து..." என்று சத்தமிட் டான்.

அந்த மைனர் சாமி அதற்குள் பக்கத்திலிருந்த ஒரு சந் துக்குள் அவசரமாக நுழைந்துவிட்டான். அவன் கொடுத்த அந்த ஈயக் காசான செல்லாப் பணம். செம்புக் காலணுக் களுடன் கலந்தது. பிச்சைக்காரன் இதைத் தெரிந்து கொண்டதுபோல் ஒரு பெருமூச்சுவிட்டான்.

## 3

**பொ**ழுது போய்விட்டது.

ஆயிரம் ஆயிரம் ஆயிரமாய்ச் சம்பாதிக்கும் ஒரு பெரிய மனிதரின் வீட்டுக்காரி தன்னுடைய சொந்தச் செலவுக்காக வீட்டிலுள்ள அரிசியில் ஒரு பகுதியை யாருக்கும் தெரியாமல் கொல்லை வழியாக விற்பதுண்டு. விலை ஒன்றும் அதிகமாக

இல்லை. கட்டுப்பாட்டு விலைபடி பதினேரணு என்ருல் இந்த அம்மாள் ஒரு ரூபாய் பதினேரணுவுக்குத்தான் விற்பாள்; எப்போதும் படிக்கு ஒரு ரூபாய்தான் அதிகம். அதற்குமேல் கிடையாது!

இந்தப் பரம ரகசியத்தை எப்படியோ நம்முடைய குருட்டுக் கதாநாயகன் தெரிந்து வைத்திருந்தான்.

''கால்படி குடுங்கம்மா'' என்று சொல்லித் தன்னுடைய கந்தல் துணியை விரித்தான். அவளையும் அவனையும் தவிர வேறே அங்கு யாரும் இல்லை. அந்த அம்மாள் ஐந்து வடம் தங்கச் சங்கிலி போட்டிருந்த தன்னுடைய உரல்போன்ற கழுத்தைத் திருப்பி அங்குமிங்கும் பார்த்தாள். கால்படியில் முக்கால் அளவு அளந்து அந்தத் துணியில் கொட்டினுள். குருடன் இதைப் பார்த்துக் கொண்டா இருக்கிருன்? கண் கெட்ட பயல்!

பிச்சைக்காரன் ஆறேமுக்கால் அணுவை எண்ணி ஒழுங்காகக் கொடுத்தான். அந்த மைனர்ப் பயல் கொடுத்து விட்டுப்போன செல்லாத நாலணு அவள் கைக்கு மாறியது. அதை அவள் பார்க்கவில்லை. வாங்கி அவசரமாகச் சுருக்குப் பைக்குள் போட்டுக் கொண்டாள்.

இருட்டிக்கொண்டு வந்தது.

குருட்டு வையாபுரி கோலை அங்குமிங்கும் வேகமாக ஊன்றி அநாயாசமாக நடந்தான். அந்தப் பாதையில் அதிகப் பழக்கப்பட்டவன் போலவும் திடீரென்று ஒளி பெற்றவன் போலவும் ஆற்றங்கரை மண்டபத்தை நோக்கி நடந்தான். தெய்வானையின் நினைவு அவனுடைய கால்களுக்கு ஒரு புது மாதிரி வலுவைக் கொடுத்திருக்க வேண்டும்.

மண்டபத்துக் கால்களில் அவனுடைய கம்பு தட்டுப் பட்டது.

''தெய்வானை!''

''உம்!''மென்று லேசாகச் சத்தம் வந்தது.

குருடன் குச்சியைக் கீழே எறிந்தான். மண்டியிட்டு உட்கார்ந்து சாமான்களை எடுத்து ஒரு ஓரத்தில் வைத்தான். கையை நீட்டி இருளில் துழாவினுன். கையில் அவள் தட்டுப் பட்டாள். ஒரு புறமாக அவள் சாய்ந்து படுத்துக் கிடப்பதை அவன் உணர்ந்தான்.

"தெய்வானை!"

"உம்..."

"ஏன் ஒரு மாதிரியா இருக்கே?"

அவள் பதில் பேசவில்லை. அவள் குரல் இன்றைக்கு ஒரு மாதிரி இருந்தது.

"என்ன தெய்வானை! யாரும் இங்கே இருக்காங்களா!"

"ஊஹும்!"

"ஏன் படுத்துக் கிடக்கிறே? உடம்புக்கென்ன?— இன்னம்மா உடம்பு சரியா இல்லே உனக்கு?"

"தலைவலி!...அப்பா!...உஸ்!"

"தலைவலிதானே?" என்று அவன் கேட்டு நிறுத்தினான். பிறகு "புது ரவிக்கை வாங்கீட்டியா?" என்று செல்லமாய்க் கேட்டான்.

"புது ரவிக்கையா!" என்றாள் ஒன்றும் தெரியாதவள் போல்.

"சரிதான்! தலைவலின்னா இப்படியா பேசச் சொல்லும்? 'நீ யாரு'ன்னுகூட என்னைக் கேட்பே போலேருக்கே! உன் குரல்கூட புதுமாதிரி இருக்கே?"

"இல்லே; ரவிக்கை வாங்கிட்டேன்" என்று முனகினாள் அவள். தன் மேல் துணியை நன்றாய் இழுத்து முக்காடிட்டுக் கொண்டாள். அவள் தேகம் லேசாக நடுங்கியது.

"என்ன தெய்வானை நடுங்குறே? காத்து வாடை இல்லாத இடமாகப் பார்த்துப் படுக்கிறதுதானே?—அது சரி... உலகத்திலே இப்போ ஒரே ஏமாத்திற பிழைப்பா இருக்கு!"

இதைக் கேட்டவுடன் அந்தப் பெண் பிள்ளையின் தேகம் கொஞ்சம் தூக்கிவாரிப் போட்டதுபோல் இருந்தது......... "ஏமாற்றுகிற பிழைப்பா?"

"இதைக் கேளேன் : இதைக் கேட்டீன்னா உன்னோட' காச்சல், தலைவலி எல்லாம் பறந்து போகும். இதை உன் கிட்டே காத்தாலேயே சொல்ல நினைச்சேன்" என்று ஆரம்பித்தான்.

"குருடனாச்சேன்னு என்கிட்டே ஒரு மைனர்ப் பயல் செல்லாப் பணத்தைக் கொடுத்து ஏமாத்திட்டான்...!"



"உம்!"

"ஒரு பொம்பளே அரிசியை முக்காலா அளந்து போட்டா!"

"உம்!"

"இன்னொரு சின்னப் பொண்ணு—என்னோட தெய்வா னென்னுதான் வச்சுக்கயேன்; ரவிக்கை ஒண்ணு மடியிலே கிடக்கிறப்பவே தன்னோட கிழிஞ்ச ரவிக்கையை எடுத்துக் காட்டி ஒரு ரூபாய் வாங்கிட்டா!—நான் பிறவியிலேயே குரு டன் இல்லே! பிழைப்புக் கிடைக்காததுனாலே குருடனு னேன்!...இந்தா, என் தெய்வானே திரும்பிப்பாரு; என்னேப் பாரு; உனக்கு இதைப்போல் பத்து ரவிக்கை நான் வாங்கித் தர்ரேன்" என்று தன் கண்களே நன்ருய்த் திறந்துகொண்டு அவளே அப்படியே தூக்கி அங்கு வீசிய நிலவின் வெளிச்சத்தில் அவள் முகத்தை உற்றுப் பார்த்தான். ஆவலோடு, ஆசையோடு, வெறியோடு, ஆனந்தத்தோடு பார்த்தான்.

'ஆ! என்ன ஏமாற்றமிது?'

அங்கு அவனுடைய தெய்வானே இல்லே. வேருெருத்தி இருந்தாள். விகாரமாக, சதை நிறைந்த முகத்தோடு, பரட் டைத் தலேச்சியாக, தெய்வானேக்குச் சற்று மூத்தவளாக இருந்தாள்.

அவள் கூறிஞள்:

"குருடனேடே இருக்கப் பிடிக்கலேயாம் அவளுக்கு. தெய்வானேன்னு என்னேப் பேரை மாத்திக்கச் சொன்ளு. உன்னோட எப்படிப் பழகிறதுன்னு சொல்லிக்கொடுத்தா; நீ என்னேத் தெய்வானேன்னு நம்புகிறமாதிரி நடந்துக்கச் சொன்ளு; நாலு நாதான் ஆச்சு, வித்தியாசம் தெரியா துன்னு.—ஆனால் நான் அவளேப்போல அளகில்லே; அவளேப் போல உன்னே ஏமாத்தவும் மாட்டேன். என்னே நம்ப மாட்டியா?"

அவள் கண்களில் நீர் பொங்கியது. அந்தக் கண்ணீர் அவன் கண்களிலும் நீரைப் பெருக்கியது.

★

# புயல்

இளமைத் திமிரும் வயதின் முறுக்கும் கொண்ட ஆயிரம் ஆயிரம் பெண்களுக்குத் திடீரென்று ஒரே சமயத்தில் பேய் பிடித்துக்கொண்டு தலைசுற்றி ஆடத் தொடங்கினால் எப்படி இருக்கும்? பயங்கரமான ஒரு மந்திரவாதியின் இரக்கமற்ற சவுக்கடி தாங்காது அவர்கள் ரத்தம் கக்கி அலறினால் எப்படி இருக்கும்?—உண்மையிலேயே இயற்கைப் பெண்ணுக்குப் பேய்பிடித்துவிட்டதா? கடவுள் என்னும் மந்திரவாதி அவளுடைய வெறி கண்டு சீற்றம் கொண்டு அவளை இப்படி அலறித்துடிக்க வைக்கிறானா?

கடலோரமாக இருந்த அந்தக் கிராமம் புயலால் மத யானையின் கையிலகப்பட்ட மலர் மாலையாகிக் கொண்டிருந்தது. பெரிய பெரிய மரங்களெல்லாம் பம்பரம் போல் சுழன்று பூமியின் நெஞ்சுக்குள் ஓடியிருந்த ஆணிவேர்களைப் பிய்த்துக்கொண்டு விழுந்தன. கடல் அலைகள் திமிங்கலங்களாக வாயைப் பிளந்து கரையோரத்தில் நின்ற குடிசைகளை விழுங்கின. பேய்க் காற்றில் அகப்பட்டு வீட்டுக் கூரைகளான, தென்னங் கீற்றுகளும், தகரத்தகடுகளும், சீமை ஓடுகளும் பட்டபாடு......!

ஊருக்கு மத்தியில் ஒய்யாரமாக நின்ற ஒரு மாடி வீட்டுக்குள்ளிருந்து சன்னல் வழியாக மூன்றுபேர் இந்தக் காட்சியை உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தார்கள். பெரிய மனிதர் ஒருவர், அவர் மனைவி, பையன். அந்தப் பெரிய மனிதர் சென்னையில் குதிரைப் பந்தயம் பார்ப்பதற்காக வாங்கிய தூரதிருஷ்டிக் கண்ணாடியால் கடலின் கொந்தளிப்பைக் கவனித்துக் கொண்டிருந்தார். அவர் மனைவி தான் உடுத்தியிருந்த கொள்ளேகாலம் பட்டுப் புடவையால் உடம்பை

இழுத்துப் போர்த்துக்கொண்டு பயத்தால் சுருண்டுகொள் ளும். முள்ளம்பன்றி போல் நாற்காலியில் முடங்கிக் கிடந் தாள். பையன் திறந்த கண்ணை இமைக்காமல் சன்னலுக்கு வெளியே நிலைகுத்திய பார்வையில் இருந்தான்.

பையனின் மனம் அவனிடமில்லை. எதிரே குமுறிக் கொண்டிருந்த கிராமப் பகுதியையும், கடலையும், கார் மேகத்தையும், அடிவானத்தையும் அளந்துவிட்டு அதற்கப் பாலும் தாண்டிச் சென்றது. அடிக்கடி தன் கண்களில் தேங் கும் கண்ணீரை யாரும் அறியாதபடி துடைத்துக் கொண் டான். அவனுக்கு எதிரிலேயே நூற்றுக்கணக்கான குடிசை கள் இருந்த இடம் தெரியாமல் கடல் அலைகளால் பிய்த்துப் பிய்த்துச் சின்னாபின்னப் படுத்தப்பட்டன.

"பெரிய பட்டாளமே திரண்டு வர்ராப்போல தெரியுது. எல்லாக் கூட்டமும் ஊருக்குள்ளேதான் ஓடிவருது" என்றார் பெரியவர்.

கண்ணாடி வழியே கவனித்துக் கொண்டிருந்த அவரைத் திரும்பிப் பார்த்தாள் மனைவி. அவள் ஒன்றும் பேசவில்லை.

"ஊருக்குள்ளே ஓடி வராமல் கடலுக்குள்ளேயா போய் விழுவாங்க?" என்றான் பையன்.

"ஒண்ணு ரெண்டா, ஆயிரம்பேர் வந்தா அத்தனை பேருக்கும் இடத்துக்கு எங்கே போறது?"

"மனமிருந்தால் இடமிருக்கும்."

தகப்பனுக்கும் பிள்ளைக்கும் இந்தமாதிரிப் பேச்சு ஆரம்ப மாவதைப் பிடிக்காதவள் போல் தாயார் குறுக்கிட்டாள். "ஊர் வம்பு நமக்கெதுக்கு? அடுப்பிலே சூடா உருளைக் கிழங்கு வருவல் போடச் சொல்லியிருக்கேன்; ஒரு நிமிஷத் தில் வந்திடும், பேசாமல் சாப்பிட்டுச் சும்மா இருந்தால் போதும்."

'ஊர்வம்பு'க்கு இவர்கள் போகாவிட்டாலும் ஊர்வம்பு இவர்களைத் தேடிக்கொண்டு வந்தது. கரையோரமாகக் குடி யிருந்தவர்கள் அடித்துப் புடைத்துக்கொண்டு குழந்தை குட்டிகளுடன் ஊருக்குள் நுழையத் தலைப்பட்டார்கள். மாடி வீடுகள் அதிகமாயிருந்த இவர்களுடைய தெருவில்

அந்தக் கூட்டம் புகுந்து நாலுபுறமும் சிதறிப்போய் ஒண்டிக் கொண்டது. இவர்களுடைய வீட்டு முகப்பிலும் சிலர் கூடினார்கள்.

பையன் அவசரம் அவசரமாகக் கீழே இறங்கிப்போனான். "எங்கேடா போகிறாய்?" என்ற அவன் தாயாரின் கேள்வியை அவன் காதில் போட்டுக்கொள்ளவில்லை. கீழே இறங்கிச் சென்று வெளிவராந்தாவில் கூடியிருந்தவர்களை ஹாலுக்குள் நின்றபடியே சன்னல் வழியாகப் பார்த்தான். நேற்றுப் பிறந்த பச்சைக் குழந்தைகள் முதல், நாளைக்குச் சாகப் போகிற தொண்டு கிழங்கள்வரை அங்கே வந்திருந்தன. ஒரு உடம்பாவது நனையாமல் இல்லை; ஒரு உடம்பாவது நடுங்காமல் இல்லை; குளிர் தாங்கமுடியாமல் வெறும் கைகளை மடக்கித் தங்கள் நெஞ்சுகளை மறைத்துக் கொண்டிருந்தார்கள் ஆண்கள். பெண்களின் தேகத்தைத் துணி என்ற பெயருள்ள கந்தல்கள் மூடி மறைப்பதற்கு முயன்றுகொண்டிருந்தன. வெளி வராந்தாவில் இடம் நிறைந்ததால் வெளியே தரையில் பலர் தூண்களைப் பற்றிக் கொண்டு நின்றனர்.

பையன் கீழே இறங்கிய அதே வேகத்தில் திரும்பவும் மேலே வந்தான்.

"அப்பா!"

அப்பா அப்போதுதான் வெளியே அதிக அக்கறையுடன் பார்க்கலானார். பையன் அழைப்பதன் காரணத்தை அவர் ஊகித்துக்கொண்டதால் அவருக்கு அவன் பேச்சைக் கேட்பதில் இஷ்டம் இல்லை.

"அப்பா!"

அப்பா திரும்பி மூக்குக் கண்ணாடி வழியே நெற்றியைச் சுருக்கிக்கொண்டு பிள்ளையைப் பார்த்தார்.

"வராந்தாவில் நிற்க இடமில்லை. பாதிப்பேர் நடுத் தெருவில் மழையில் நனைகிறார்களப்பா! காற்று அவர்களை அடித்துக்கொண்டு போய்விடும் போலிருக்கிறது!"

"அதற்காக?"

"கொஞ்சநேரத்துக்கு வெளிக் கதவைத் திறந்து உள்ளே விட்டால் அவர்களுக்குச் சௌகரியமாக இருக்கும். ஹாலில்தான் நிறைய இடம் கிடக்கிறதே!"

தகப்பனார் கேலியாகச் சிரித்தார். தம்முடைய மனைவியைப் பார்த்து, "பிள்ளையாண்டானுடைய யோசனையைக் கேட்டியா? ஹால் மாத்திரம் வேண்டாம்; வீட்டையே அவுங்களுக்கு ஒழிச்சுக் கொடுத்திட்டு நம்ம நடுத்தெருவுக்குப் போகலாமே."

"ஹால் சும்மாதானே அப்பா இருக்கிறது? நமக்கு இப்போது உபயோகமில்லாத இடத்தை நாலு நாழி அவர்களிடம் விட்டால் என்ன?"

"நீ சும்மா இருடா குழந்தை! உனக்கு ஒண்ணுந் தெரியாது; நீ சிறுபிள்ளை" என்று தாயார் குறுக்கிட்டாள். பின்பு பையனின் முகம் வருத்தத்தால் சுருங்குவதைக் கண்டவுடன் அவளுக்கு அவனிடம் ஏதாவது சொல்ல வேண்டும் போலிருந்தது.

"உனக்கு அவர்களோட குணந்தெரியாது. அத்தனையும் திருட்டுக் கழுதைகள்! ஹாலுக்குள்ளே அவர்களை விட்டு யாராலே காவல் காக்க முடியும்?"

பையனுக்குத் தாயாரின் சமாதானம் உண்மை என்று தோன்றவில்லை. "திருட்டுப் போறத்துக்கு அந்த இடத்தில் சாமானே கிடையாதே! நான் வேணுமானால் அங்கேயே இருந்து அவர்கள் எதையும் தொடாமல் பார்த்துக் கொள்கிறேன்."

தாயாருக்குத் தர்மசங்கடம். தகப்பனுருக்கு உள்ளுக்குள் கோபம். பையனோ விடுவதாக இல்லை.

"பள்ளுப் பறை பதினெட்டுச் சாதியும் வீட்டுக்குள்ளே விடச் சொல்றியா? இடத்தைக் கொடுத்தா மடத்தைப்பிடுங்கற பசங்க அத்தனைபேரும். நீ சும்மா இருக்கமாட்டே?" என்று தம் கோபத்தை வெளியில் விட்டார் அவர்.

"கோயிலுக்குள்ளே எல்லோரையும் விடுகிறபோது..." என இழுத்தான் பையன். கடவுளின் வீடான கோயிலைவிட

மனிதனின் வீடான இந்த மாளிகை உயர்ந்ததா என்பது அவனுடைய எண்ணம்.

"கோயில் சர்க்கார் சொத்து; இது என்னுடைய பாட்டன் சம்பாதித்த சொத்து!"

பையன் கொஞ்ச நேரத்துக்கு வாயை மூடிக்கொண்டிருந்தான். தகப்பனார் வாயில் வந்தபடி சர்க்காரையும் சட்டத்தையும் திட்டத் தொடங்கினார். கோயிலுக்குள்ளே எல்லோரையும் விட்டதிலிருந்து கடவுள்களெல்லாம் புறப்பட்டுப் போய்க் கங்கையில் விழுந்து விட்டார்களாம். உழைப்பவர்களுக்குச் சாதகமாகச் சட்டம் வந்ததிலிருந்து ஏழை எளியவர்களுக்கெல்லாம் திமிர் பிடித்துவிட்டதாம். உயர்ந்தவர் தாழ்ந்தவர் என்று இல்லாமல் ஊர் முழுதும் கெட்டுப்போய்விட்டதாம். 'சர்க்கார் வந்து இப்போது இவர்களுக்கு இடம் கொடுக்கட்டுமே' என்று சவால் விட்டார் பெரியவர்.

முகத்தைத் தொங்கவிட்டுக் கொண்டு சும்மா இருப்பதைத் தவிர பையனுக்கு வேறு வழியில்லை. தகப்பனாரிடம் அகப்பட்டுக் கொண்டு அரசாங்கமே அந்தப் பாடுபடும்போது அவன் எம்மாத்திரம்? உலகத்து அரசியலைக் கரைத்துக் குடித்தவர் போலவும், பொருளாதாரத்தைப் பத்து வருஷம் ஊன்றிப் பயின்றவர் போலவும் சமூகப் பிரச்னைகளையெல்லாம் சக்கைபோடு போட்டுக் கொண்டிருந்தார்.

உருளைக்கிழங்கு வருவல் வந்தது. பையன் முதலில் அதைத் தொடவில்லை. மற்ற இருவரும் சாப்பிட்டார்கள். கடைசியில் தாயாரின் தொந்தரவுக்காகப் பையன் கொஞ்சம் எடுத்து வாயில் போட்டுக்கொண்டான்.

புயலின் வேகம் வரவர அதிகமாயிற்று. பெரியவர் தம்முடைய சொத்து சுதந்திரங்களைப் பற்றி நினைத்தார். நெல் வயல்கள் அவருக்கு நிறைய இருந்தன. அவைகளுக்கு அதிகமான நஷ்டம் இருக்காது. அடுத்தாற்போல் அவருடைய வாழைத் தோட்டம் ஞாபகத்திற்கு வந்தது.

"ஒரு வாழைகூட நிலைச்சு நிற்காது; ஆறு ஏக்கர் தோட்டமும் அப்படியே பாழாய்ப் போகும்!"

"நல்ல வேளை!"

தாயாரின் பேச்சு அந்த இடத்தில் அசம்பாவிதமாக இருந்ததால் பையன் தகப்பனாரைக் கவனித்தான்.

“காலணுக்காசு பாக்கி இல்லாமல் குத்தகையை முன் பணமா வாங்கியாச்சு. கொஞ்சம் அசந்து போயிருந்தால் இத்தனை நஷ்டத்தையும் நம் தலையிலே போட்டிருப்பான்.”

பையன் வெறுப்படைந்தான். மற்றவர்களுடைய துன்பத்தை மனிதர்கள் பகிர்ந்து கொள்ளுகிற விதமா இது?

## 2

அன்றைக்கு இரவு பத்து மணிக்குத்தான் புயல் ஓய்ந்தது. சாப்பிட்டுவிட்டு எல்லோரும் படுக்கை அறைக்கு வந்தார்கள். மின்சார விளக்குகள் எரியாததால் மண் எண்ணெய் விளக்குகளைக் கொண்டு காரியங்கள் நடந்தேறின. படுக்கையில் படுத்த பையனுக்குத் தூக்கம் வரவே இல்லை. கண்களை மூடிக்கொண்டு மண்டையைக் குழப்பிக் கொண்டிருந்தான்.

“ராஜா!” என்று அவன் தாயார் செல்லமாய்க் கூப்பிட்டாள்.

பையன் பதில் பேசவில்லை.

“தூங்கிவிட்டான் போல இருக்கு. அவனைப் போய்த் தொந்தரவு பண்ணாதே. இப்படி வா” என்றார் பெரியவர்.

பிறகு இருவரும் இருளில் தங்கள் பையனைப் பற்றிப் பேசத்தொடங்கினார்கள். பையன் விழித்திருப்பது தெரியாததால்; தாராளமாக அவர்களுடைய எண்ணங்கள் வெளிப்பட்டன.

“பையன் போற போக்கைப் பார்த்தியா? எல்லாம் உன்னாலே வந்தது. நாயைக் குளிப்பாட்டி நடுவிலே வைத்தாலும் வாலைக் குழைத்துக் கொண்டு குப்பை மேட்டுக்குதான் ஓடும்.”

சுரீர் என்று ஒரு கத்தி மார்புக்குள் நுழைந்து முதுகுப் புறமாய் வெளிவந்த மாதிரி இருந்தது பையனுக்கு.

“இந்த வயசில் இப்படித்தான் கிறுக்குத்தனமாய்ப் பேசுவான். நாலு வருஷம் போனா உங்களைவிடச் சமர்த்தா இருக்கப் போறான் பாருங்க! காலுக்கு ஒரு கட்டுப்போட்டு

அவனுக்கின்னு ஒரு குழந்தை பிறந்தா எல்லாம் சரியாப் போகும்.''

''நமக்குன்னு ஒரு குழந்தை பிறந்தா இப்படியெல்லாம் பேசுமா?''

''நடக்காததை ஏன் இப்போ பேசுறீங்க? நம்ம ராஜா நல்ல புத்திசாலியா வருவான் பாருங்க. எல்லாம் வளர்க்கிற முறையிலே இருக்கு!''

''ராத்திரி சாப்பிடறப்போ அவன் என்ன சொன்னன் கேட்டியா? இலையிலே சாப்பாட்டை வைத்துக்கொண்டு இப்படிப் பேசினு எப்படி அந்தச் சோறு உடலில் ஒட்டும்?''

ராத்திரி இலைக்கு முன்னுல் உட்கார்ந்துகொண்டு அவன் செய்த குற்றத்தை ராஜு இப்போது எண்ணிப் பார்த்தான். இதே குற்றத்தை மத்தியானமே செய்யும்படி அவனுக்குத் தூண்டுதல் இருந்தது. ஆனுல் தனக்குள்ளாகவே வெகுநேரம் போரிட்டுவிட்டு இரவில் சாப்பிடப் போகும்போது அதை ஆரம்பித்தான். சாப்பாட்டு விஷயத்தைச் சாப்பாட்டு வேளையில் ஆரம்பிக்காமல் வேறு எப்போது ஆரம்பிப்பது?

காலையில் பத்து மணிக்குமேல் வீட்டிற்கு முன் கூடியவர்கள் பொழுது போகும்வரையில் அங்கேயே நெருக்கிக்கொண்டு கிடந்தார்கள். அதற்குப் பிறகும் இரவு பத்து மணிக்குப் புயல் ஓய்ந்த பின்பும்கூட அவர்கள் எங்கும் போகவில்லை. எங்கே போவார்கள்? எங்கே போய் என்ன செய்ய முடியும்?

சாயங்காலமாக வீட்டுக்கு வெளியே ஒரே அழுகை மயமாக இருந்தது; சகிக்கமுடியாத அழுகை. சின்னஞ்சிறு குழந்தைகள் பாலுக்கழுதன; வயதுவந்த பிள்ளைகள் சோற்றுக்கழுதன; பெண்கள் காலையிலே கடலுக்குள் போன ஆண்களை நினைத்துக் கொண்டு அழுதார்கள். எல்லோருடைய எல்லா விதமான அழுகைகளுக்கும் அடியில், அடிவயிற்றில், பசிப்புயல் பதுங்கிச் சீறியதால் அவர்களுடைய அழுகையின் வேகம் ஐம்பது மடங்காகப் பெருகியது.

ராஜுவும் அவர்களுடன் சேர்ந்து கொண்டு ஹாலுக்குள் நின்று மௌனமாக அழுதான். தான் இப்படி அழுவது அவ

னுக்குக் கோழைத்தனமாகத் தெரிந்தது. 'திடீரென்று வாசற் கதவுகளைத் திறந்துவிட்டு அவர்களை உள்ளே அழைத்தால் என்ன? அரிசி மூட்டை இருக்குமிடத்தைக் காண்பித்து அதை அடுப்பில் கொதிக்க வைத்துக் குடிக்கச் சொன்னால் என்ன? ஒருநாள்—ஒரு வேளைச் சோறு போட்டால், தங்க இடம் கொடுத்தால், இந்தப் பெரியகுடி முழுகியா போய்விடும்?

ஆனால் அவன் அப்படிச் செய்யவில்லை. சாப்பாட்டிற்குத் தகப்பனாரோடு இலைக்கு முன் உட்கார்ந்தபோது, இலையி லிருந்த நாலுவகைக் கறியும் குழம்பும் அவன் கண்களை உறுத் தின. ஒவ்வொரு அரிசிச் சோறும் ஒரு ஏழைக் குழந்தையாக மாறி, 'ஐயா, பசிக்குதே!' என்று அவன் முன்பு அலறியது. அவன் அதைத் தொடவில்லை.

"ஐந்து படி அரிசியைக் கஞ்சியாய்க் காச்சி ஊற்றினால் நூறு பேருக்குப் பசி அடங்குமே!" என்று ஆரம்பித்தான்.

"என்ன சொல்றே?" என்றார் தகப்பனார்.

சற்று முன்பு சொன்னதையே அவன் திருப்பிச் சொன் னான்: "ஐந்து படி அரிசிதான் செலவு; நூறு பேருடைய வயிறு குளிரும்."

"அரிசிக்கு எங்கே போறது?"

அவனுக்கு இந்தக் கேள்வியின் பொருள் விளங்கவில்லை. அரிசிக்கு எங்கும் போகவேண்டாமே! மூட்டை மூட்டையாய் அங்கே அரிசி இருந்தது; களஞ்சியம் களஞ்சியமாய் அங்கே நெல் இருந்தது; எலியும் பெருச்சாளியுமே ஒரு நாளைக்கு ஒன்பது படி அரிசியைத் தின்பதாகச் சமையற்காரன் புகார் செய்து கொண்டிருந்தான்.

தகப்பனும் பிள்ளையும் அதற்கப்புறம் பேசிக் கொள்ள வில்லை. இலையில் போட்ட சோற்றை அப்படியே வைத்து விட்டுக் கையலம்பிக் கொண்டான் பையன். தாயார் அவ னிடம் வந்து விடாப்பிடியாய்ச் சாப்பிடச் சொல்லிக் கெஞ் சினாள். எவ்வளவோ சமாதானம் செய்தாள். ஆனால் ஐந்து படி அரிசியை அதற்காக அவள் இழப்பதற்கு மாத்திரம் தயாரில்லை.

# 3

ராஜு அவர்களுடைய சொந்தப்பிள்ளைதான். சொந்தம் என்பதற்கு என்ன அர்த்தம்? வீடு வாசல், காணி கரை, ஆடு மாடு எல்லாம் எப்படி ஒருவருக்குச் சொந்தமாகின்றன? அந்த மாதிரிச் சொந்தம் இது. பத்தாயிரம் ரூபாய்ப் பணம் கொடுத்து விலைக்கு வாங்கிய அவர்களுடைய சொந்தப் பிள்ளை அவன். ஐந்தாறு குழந்தைகளைப் பெற்றுவிட்டுப் பிறகு வளர்க்க முடியாமல் திண்டாடிய பெற்றோரிடமிருந்து அவனை ஸ்வீகாரம் செய்து கொண்டார்கள்.

படுக்கையில் புரண்டுகொண்டிருந்த ராஜுவுக்குத் தூக்கம் வரவில்லை. பெற்ற இடத்தின் பிடுங்கல்களும் வளர்க்கும் இடத்தின் வளப்பமும் மாறி மாறி நினைவில் வந்தன. சோற்றுக்கும் துணிக்கும் அவன் அங்கே பட்ட பாடு கொஞ்ச நஞ்சமல்ல. அதற்கு முற்றிலும் மாறாக இங்கே எல்லாம் ராஜ போகமாக இருந்தது. திருச்சிராப்பள்ளியில் ஹாஸ்டலில் தங்கி அவன் படித்துக்கொண்டிருந்தான். அவனுக்கு வேண்டியதையும் ஸ்வீகாரப் பெற்றோர்கள் வாங்கி வாங்கிக் கொடுத்தார்கள். ஒன்றே ஒன்றைத் தவிர அவனுக்கு எல்லாம் கிடைத்தன;—உண்மையான அன்பு; ரத்தத்திலே ஊறிய அன்பு.

'நமக்குன்னு ஒரு குழந்தை பிறந்தா இப்படியெல்லாம் பேசுமா?' என்று அவன் தகப்பனார் தன் மனைவியைக் கேட்ட போது, 'நம்முடைய தகப்பனாராக இருந்தால் இப்படிக் கல்லாலடித்த சிலைபோல் மனம் இரங்காமல் இருப்பாரா?' என்று எண்ணினான். நாயைக் குளிப்பாட்டி நடு வீட்டில் வைத்ததாக அவர் சொன்ன உபமானமும் அவன் மறக்கவில்லை. எங்கேயாவது ஆயிரத்தில் ஒரு நாய்க்குட்டிக்குத் அதிர்ஷ்டம் கிடைக்கிறது. பாலும், பழமும், பட்டுமெத்தையும், கார் சவாரியும் அதற்கு அளித்துப் பணமுள்ளவர்கள் மகிழ்கிறார்கள். அதனால் எல்லா நாய்களிடமும் அவர்களுக்குப் பிரியம் என்று அர்த்தமா? தினந்தோறும் தோட்டிகளால் அடித்துக் கொல்லப்படும் குப்பைமேட்டு நாய்களின் கூட்டத்தை அவர்கள் பார்த்துக் கொண்டுதானே இருக்கிறார்கள்?

பாதி ராத்திரிக்குமேல் புயல் நன்ருக ஓய்ந்துவிட்டது. வானத்தில் மேகங்களைக் காணும். ராஜு தான் திருச்சியிலிருந்து லீவில் திரும்பும்போது கொண்டுவந்த பதினைந்து ரூபாயை நினைத்துக் கொண்டான். அவனுக்கு எதிர்பாராமல் கிடைத்த பணம் அது. பத்திரிகைக்குப் பல கதைகள் எழுதி அனுப்பிக் கொண்டிருந்தான். பெரும்பாலும் எல்லாக் கதைகளும் திரும்பிவிட்டன. சமீபத்தில்தான் ஒரு கதையை மட்டும் பிரசுரித்து அதற்காக இந்தப் பணத்தை அன்பளிப்பாக அனுப்பியிருந்தார் ஆசிரியர். இந்தச் சமயத்தில் கிடைத்த பதினைந்து ரூபாய் அவனுக்குப் பதினையாயிரம் போல் தோன்றியது.

பொழுது விடிந்தவுடன் ராஜு ஊருக்குள்ளே கிளம்பினுன். நல்ல மனிதர்கள் நாலு பேராவது இன்னும் ஒவ்வொரு ஊரிலும் இருக்கிருர்கள் என்ற உண்மை அவனுக்கு அப்போதுதான் தெரிந்தது. ஈவு இரக்கம் உள்ளவர்கள் ஒன்ருய்க் கூடிக் கஞ்சி காய்ச்சி ஏழை எளியவர்களுக்கு ஊற்றிக் கொண்டிருந்தார்கள். உடலில் வலுவிருந்தவர்கள் மரம் மட்டைகளை வீடுகளின் முன்பிருந்து அகற்றிக் கொண்டிருந்தார்கள். அங்கே இருந்த அரசாங்க அதிகாரியும் மற்றவர்களைத் துணைகொண்டு தம்மாலான உதவிகளைச் செய்தார்.

கரையோரமாக ஒதுங்கியிருந்த ஒரு கட்டை மரத்தைச் சுற்றிலும் சிறிய கூட்டம் இருந்தது. ராஜு கூட்டத்தோடு கூட்டமாய் போய் நின்ருன். அங்கே கண்ட காட்சி இருதயத்தைக் கசக்கிப் பிழிந்தது. மூன்று பெண்பிள்ளைகள் கட்டை மரத்தின் ஒரு மூலையைக் கட்டிக்கொண்டு ஓவென்று கதறி அழுதார்கள். வாயிலும் வயிற்றிலும் மாறி மாறி அடித்துக்கொண்டு புலம்பிஞர்கள். ராஜு நடந்ததைப் புரிந்துகொண்டான். நேற்றுக் காலையில் கட்டை மரத்திலேறிக் கடலுக்குள் போனவர்கள் திரும்பவில்லை. ஆனல் கட்டை மரம் மாத்திரம் திரும்பிவிட்டது. மூன்று பேர் போனுர்களாம். அந்த மூன்று பேர்களுடைய உடல்களும் இப்போது எங்கே ஒதுக்கப்பட்டுக் கிடக்கின்றனவோ? எந்த நிலையில் கிடக்கின்றனவோ?

ஊர்ப்புறத்தில் புயல் விளைவித்திருந்த நாசத்தைப்

பார்க்கப் பார்க்க ராஜுவுக்குத் தன் பையிலிருந்த பணம் பெரும் சுமையாகத் தெரிந்தது. அதைக்கொண்டு எப்படி உதவலாம் என்று எண்ணற்ற யோசனைகள் செய்தான். இந்தப் பணத்தால் எள்ளத்தனை உபகாரம்கூடச் செய்ய முடியாதே என்பதும் அவனுக்குத் தெரியாமல் இல்லை. ஆனாலும் அநேகம் பேர் தங்களுடைய எல்லாவற்றையும் இழந்து விட்டு நிர்க்கதியாய் நிற்கும்போது தான் மட்டிலும் இந்தப் பதினைந்து ரூபாய்க்குச் சொந்தக்காரனாக இருக்க விரும்ப வில்லை.

ஊரை நன்ருகச் சுற்றிப் பார்ப்பதற்குள் மத்தியானமாகி விட்டது. கடைத் தெருப்பக்கம் வந்தான். ஒரு துணிக் கடையில் நுழைந்து மூன்று கெட்டியான போர்வைகளைப் பதினைந்து ரூபாய்க்கு வாங்கிக்கொண்டான். வானத்துக்குக் கீழே கூரையில்லாமல் உறங்குபவர்களுக்குப் போர்வைதான் சரியான கூரை; இடுப்பில் துணியில்லாதவர்களுக்குச் சுலபமாய்க் கிழியாததுணி; படுக்கப் பாயற்றவர்களுக்குச் சுருட்டி மடக்கக் கூடிய பாய்...

திரும்பவும் கட்டை மரத்துப் பக்கம் ராஜு வரும்போது அங்கே கூட்டம் எதுவும் இல்லை. கந்தல் கட்டிய குழந்தைகள் இரண்டு பரட்டைத் தலையோடு மணலில் சோர்ந்து படுத்திருந்தன. மூன்று பெண்களும் அப்படியே அந்தக் கட்டை மரத்தைத் தழுவிக்கொண்டு கட்டையைப்போல் நினைவிழந்து கிடந்தார்கள். கண்ணீர் மாத்திரம் பெருகிக் கொண்டே இருந்தது.

ராஜு அவர்களுக்கு அருகில் போனவுடன் அவர்கள் புரியாமல் விழித்தார்கள். போர்வையை ராஜு ஒவ்வொன்ருக எடுத்து ஒவ்வொருவருக்கும் கொடுத்தான். இயந்திரம் போல் அவர்களது கரங்கள் நீண்டு அவற்றைப் பெற்றுக் கொண்டன.

ஒரே ஒருத்தி துயரம் தாங்காது ராஜுவைப் பார்த்துக் கத்தினள்: ''எங்களுக்குக் கோடித் துணியா ஐயா போடு றீங்க? நாங்க என்னய்யா செய்வோம்? எங்க பிள்ளை குட்டி எப்படி ஐயா பொழைக்கும்?''

கண்ணீரைத் துடைத்துக்கொண்டு ராஜு அந்த

இடத்தை விட்டு நகர்ந்தான். அவனைச் சுற்றியிருப்பவர்களின் துன்பம் அவனைத் தொடர்ந்து கொண்டே வந்து பரிகசித்தது. ஊருக்கே பொதுவாகப் புயல், சேதம் விளைவித்தது உண்மை தான்; ஆனால் அடித்துக் கொண்டுபோன நூற்றுக்கணக்கான குடிசைகள் யாருடையவை? கடலுக்குள்ளேயும் சுவர்களின் அடியிலும் செத்து விழுந்த உடல்கள் யாருடையவை? இப்போது தங்களுடைய எல்லாவற்றையுமே இழந்து தவிப்பவர்கள் யார்?

மூன்று நான்கு நாட்கள் கழிந்தன. விடுமுறை தீர்ந்து விட்டதால் ராஜு திரும்பவும் திருச்சிக்குப் புறப்பட்டான். அவனுடைய சாமான்களை எடுத்துப் பெட்டிக்குள் வைப்பதில் அவனுக்கு உதவி செய்ய வந்தாள் அவன் தாயார். உடைகள், புத்தகங்கள் யாவும் எடுத்து அடுக்கி ஆயிற்று. படுக்கையைச் சுற்றிக் கட்டும்போது ஏதோ நினைவு வந்தவள் போல் பரக்கப் பரக்க உள்ளேபோய் ஒரு புதுப் போர்வையை எடுத்துக்கொண்டு அவனிடம் வந்தாள்.

பையன் அதை உற்றுப் பார்த்தான். நெற்றியில் கேள்விக் குறி எழுந்தது.

"எப்போ வாங்கின போர்வை அம்மா இது?"

"முந்தா நாள் வாங்கினேன். கொள்ளை மலிவு, சொன்னால் நீ நம்பமாட்டே; மூணு போர்வை அஞ்சு ரூபாய்."

பையனுக்குப் பகீரென்றது.

"கடல் கரைப் பக்கம் போறப்போ மடிப்புக் கலையாமல் புத்தம் புதிசாக வச்சிருந்தாளுக. 'உங்களுக்கு எதுக்கடி இதெல்லாம்? பணம் குடுக்கிறேன் தாரிங்களா?'ன்னு கேட்டேன். பத்து ரூபாய் கேட்டா. அரை மணி நேரம் பேரம் பண்ணி அஞ்சு ரூபாய்க்கு வாங்கினேன். பதினைந்து ரூபாய்க் குக்கூட இந்த மூணு போர்வையும் கடையிலே தரமாட்டான்."

ஈரம் நிறைந்த இளம் நெஞ்சில் அப்போதுதான் பயங்கரமான கோரப் புயல் ஆரம்பமாகியது. அந்தப் புயலுக்கு முன்னே சில தினங்களுக்கு முன்பு வீசிய புயல் அற்பச் சூறாவளியைப் போன்றது.



# முதற் கவிதை

கவி கண்ணப்பரின் வாழ்க்கையை எழுதுவதற்காக ஆதாரங்கள் தேடிக்கொண்டிருந்தேன். ஒன்றும் சரியாய்க்கிடைக்கவில்லை. தெரிந்தவர்கள் எதுவுமே தெரியாத மாதிரி மழுப்பினார்கள். தெரியாதவர்கள் ஒன்றுக்குப் பத்தாய் அளந்தார்கள். கவிஞர் கண்ணை மூடிப் பல வருஷங்கள் ஆகிவிட்டன. அவரது வாழ்வின் விசித்திரங்களெல்லாம் அவரது கவிதைகளிலேயே ஒளிவு மறைவின்றித் தெரிந்தன. என்றாலும் நேரில் பழகியவர்களிடம் கேட்டு உறுதிப் படுத்திக் கொள்ள வேண்டாமா?

உலகத்து மகாகவிகளின் உண்மையான வாழ்வைப் போல் கண்ணப்பரையும் எழுத நினைத்த எனக்கு ஏமாற்றந் தான் மிஞ்சியது. மனிதராகிய மகா கவியை மூடி மறைத்துக் கடவுளாக்கப் பார்த்தனர். கடவுளுக்கும் இழுக்கு; கவிஞர்களுக்கும் இழுக்கு.

கடைசியாக அவர் வாழ்வு முழுவதையும் எழுத முடியாவிட்டாலும், வாழ்வில் நிகழ்ந்த ஒரு சின்னஞ்சிறு சம்பவத்தை மட்டிலும் இங்கே தருகிறேன். சிறிய நிகழ்ச்சிதான் என்றாலும் மகாகவி ஒருவருக்கு முதற் கவிதை பிறக்கக் காரணமாக இருந்த அற்புத நிகழ்ச்சி.

கவிஞரின் நெருங்கிய நண்பரான முத்துசாமி எனக்கு இந்தப் பேருதவியைச் செய்தார். முத்துசாமிக்குப் பழுத்த வயது; நிறைந்த அநுபவம்; இளமையும் அன்பும் கொண்ட நெஞ்சு. என்னுடைய கேள்விகளுக்கெல்லாம் பொறுமையோடு செவிசாய்த்துப் புன்னகை தவழ பதிலளித்தார்.

"முதற் கவிதை பிறந்த விதம் தெரியுமா?" என்றேன்.

"அது ஒரு சுவையான கதை."

"எனக்கும் அதுதான் வேண்டும்."

"சிலர் அதைக் கேட்டுச் சிரிப்பார்கள்; சிலர் சிந்தனை செய்வார்கள்; கவியுள்ளத்தின் விசித்திரப் போக்கைப் புரிந்து கொள்வது கொஞ்சம் கஷ்டம்தான்."

"தெரிந்து கொள்ள முடியாதவர்களைப் பற்றி எனக்குக் கவலை இல்லை. முதலில் நான் தெரிந்து கொள்ள வேண்டும். பிறகு மற்றவருக்குச் சொல்லவேண்டும்."

முத்துசாமி ஏதோ ஒரு கதை சொல்லப் போகிறார் என்று நம்பி நான் அதைக் கேட்பதற்குத் தயாரானேன். ஆனால் அவர் உள்ளே சென்று ஒரு பழைய கடிதத்தை எடுத்து வந்து பத்திரமாக என் கையில் கொடுத்தார். முப்பது நாற்பது வருஷங்களுக்கு முன்பு கவிஞர், அவருக்கு எழுதிய கடிதம். முத்து முத்தாக எழுத்துக்கள் காகிதத்தில் அழுத்த மாகப் பதிந்திருந்தன. நிலைபெற்ற எழுத்துக்கள் என்பதை அந்தக் கடிதமே எனக்குச் சொல்வது போலிருந்தது.

"படித்துப் பாருங்கள்."

நான் படித்தேன். படிக்கும்போதே எனக்குப் புல்லரித்தது. மறைந்து போன மகாகவி என் எதிரே உட்கார்ந்து எனக்குக் கதை சொல்வதைப் போன்ற உணர்ச்சி. கடிதத்தைப் படித்த பிறகு ஏதோ கவிதா லோகத்தின் இன்னிசையில் இழைவதைப் போன்ற ஒரு மயக்கம். சிறிது நேரம் சென்றபின் சுய உணர்வு பெற்றேன்.

"இதைத் தாங்கள் முன்பே வெளியிட்டிருக்காலாமே?"

"எதற்கும் காலம் வர வேண்டும். உண்மையைச் சொன்னால் வாய் வெந்துவிடும் என்று நினைக்கிற கோழைகள் எத்தனைபேர் இருக்கிறார்கள் தெரியுமா?"

"இப்போது வெளியிடுங்களேன்!" என்றேன்.

"இல்லை; நீங்களே செய்யுங்கள். நீங்கள் இளைஞர்" என்று சொல்லி என்னிடம் தந்தார்.

இதோ இருக்கிறது கவிஞர், தம் ஆருயிர் நண்பருக்கு எழுதிய அந்தரங்கக் கடிதம். கவி உள்ளத்தின் பலவீனம் நிறைந்த நிமிஷத்தில் வெளியான எண்ணக் குவியலாக இதை எடுத்துக் கொண்டாலும் சரி; கவிஞர் தம்முடைய

முதற் கவிதைக்குச் செய்த சொந்த விமர்சனமாக எடுத்துக் கொண்டாலும் சரி:—

**எனதருமை நண்ப,**

முதற் கவிதை பிறந்த விதத்தைத் தெரிந்து கொள்ள வேண்டுமென்று ஒரே பிடிவாதம் பிடிக்கிறாய். ஆனால் நான் அதைச் சொன்ன பிறகு நீ நிச்சயம் சிரிப்பாய். பரிகாசம் செய்து என் உயிரை வாங்கி விடுவாய். என்றாலும் உனக்குச் சொல்லாமல் அதை எப்படி மறைப்பது? மறைப்பதற்கும் அதில் ஒன்றுமில்லை.

அதைப்பற்றி ஒரு நீண்ட காவியம் எழுதினால் கூட எனக்குத் திருப்தியிருக்காது. எப்படி இந்தக் கடிதத்திற்குள் அதைச் சுருக்கிச் சொல்லப் போகிறேன்? என்றாலும் சுருக்கமாகவே எழுதுகிறேன். உன்னுடைய பரந்த மனத்தின் மோனத்தில், நீ விரும்பினால், அதை எண்ணி எண்ணி விரிவாக்கிக் கொள், என்னைப் பொறுத்த வரையில் எண்ண எண்ணத் தெவிட்டாத இன்பத் தேனின் இனிய மயக்கம் அது. நினைக்கும்போதெல்லாம் என் உள்ளம் வானத்து மேகத்திரளைவிட மென்மையாகி மல்லிகை மணத்தை உதிர்த்துக்கொண்டு மேலே செல்கிறது.

'நடுத்தெரு' என்ற அந்தக் கவிதை பிறந்த இடத்தை முதலில் சொல்லிவிடுகிறேன். நடுத்தெருவில்தான் பிறந்தது! கிழக்கும் மேற்குமான இரண்டு தெருக்கள் ஒன்று சேரும் பொது இடத்தில், பகலும் இரவும் ஒன்று சேரும் அந்தி மயக்கத்தில், இரண்டு தனித் தனி இதயங்களாக இயங்கிக் கொண்டிருந்தவை ஒன்றாய்ச் சங்கமமாயின. நீண்ட நாளையத் துடிப்பான அந்தச் சங்கமத்தின் எதிரொலிதான் என் முதற் கவிதை.

இனம் அறியாத இளம் பருவத்தில் நான் பித்தனாய்த் திரிந்த கதை உனக்குத் தெரியும். கம்பனும் காளிதாசனும் எனக்குக் கவிதை சொன்னார்கள். ஷெல்லியும், கீட்ஸும் என் இளம் நெஞ்சைத் தூண்டிவிட்டார்கள். கிராமம், நகரம் இரண்டிலும் சேராத அந்த ஊரில் ஒரு வேலையும் செய்யாமல் வெட்டிச் சோறு தின்றுவிட்டுக் கவிதையும் கையுமாய் அலைந்

தேன். என் உள்ளத்திற்குள்ளே அடிக்கடி கவிதை பிறப்பதைப் போன்ற குறு குறுப்பு ஏற்படுவதுண்டு. உள்ளம் நமைச்சல் காணுவதுண்டு. ஆனால் கவிதை—எழுத்திலோ, சொல்லிலோ பிறக்கவில்லை. சொல்லில் பொங்க வேண்டிய உணர்வு தொண்டைக்குள் நின்றுவிட்டது; எழுத்தில் பிறக்க வேண்டிய எண்ணம் நெஞ்சில் தேங்கிவிட்டது.

கவிதைக் கோளாறோ, வயதுக்கோளாறோ தெரியவில்லை. திடீரென்று மானசீகக் காதலி ஒருத்தி எனக்குள் தோன்றி எங்கும் நிறைந்து கொண்டாள். புறக் கண்களில் ஒரு தரம் கூட நான் காணாத என் கற்பனைக் காதலி! நான் படிக்கும் கவிதையில், காணும் காலை இள வெயிலில், காணாத கற்பனையில், கனவின் கருப் பொருளில் எங்கெல்லாமோ அவள் என்னோடிருந்தாள். அந்தக் கற்பனைப் பேரழகியை என்னால் மறக்கவே முடியவில்லை.

அவளை நான் ஆசையோடு என் மனத்தில் வைத்து வளர்த்து வந்தேன். கற்பனையால் அவளை ஆயிரம் விதங்களில் அலங்கரித்து மகிழ்ந்தேன். கவிதைப் பித்தோடு இந்தக் கன்னிப் பித்தும் சேர்ந்து கொண்டது. மாமா எனக்கு உதவாக்கரைப் பட்டம் தந்து ஒதுங்கினார். அத்தை எனக்கு மோஹினிப் பேய் பிடித்திருப்பதாகச் சத்தியம் செய்தாள் தாய் தந்தையற்ற நான் பிள்ளைப் பேறில்லாத அவர்களிடம் செல்லமாய் வளர்ந்தேன். அவர்களுக்கு என்னைத் திருத்த முடியவில்லை என்பதால் ஒரே ஏமாற்றம்.

இப்படி ஒருநாள் நடக்கப்போகிறதென்று நான் நம்பவே இல்லை. நண்பா, நீயும் நம்பமாட்டாய். ஆனால் நம்பாதது நடந்தது. கற்பனையில் கண்ட அதே கன்னி என் கண்ணெதிரில் வந்து நின்றாள்! உயிரும் உணர்வுமாய், அழகும் வயதுமாய் என்னெதிரில் வந்தாள்! கனவு நனவாகவில்லை; கற்பனை நனவாயிற்று!

என்னறைக்குள்ளிருந்து நான் வாய்விட்டு ஆண்டாள் பாசுரத்தை மெய்மறந்து பாடிக்கொண்டிருந்தேன். ஆண்டாள் தன் உள்ளக் கிளர்ச்சியால் கண்ணனை உருக்கத்தோடு கூவி அழைத்தாள். ஆனால் நான் அதே கவிதையைப் பாடி

என் கற்பனைக் காதலியைக் கூவி அழைத்தேன்—அவள் வந்தே விட்டாள்.

பாதி திறந்த கதவின் வெளியே நின்று அறைக்குள் இருந்த என்னை, அவள் ஆச்சரியத்தோடு பார்த்தாள். எனக்கு ஒரே பிரமிப்பு. அவளது முகத்தில் பதிந்த கண்களை என்னுல் எடுக்க முடியவில்லை. அவளை, அந்தச் சிற்ருடைக்காரியை நான் இதற்கு முன்பு கற்பனையில் மாத்திரமின்றி வேறெங்கோ பார்த்திருக்கிறேன். சந்தேகமில்லை. போன ஜன்மத்திலோ, அதற்கும் முற்பிறப்பிலோ, அல்லது தொடர்ந்தாற்போல் பல பிறவிகளிலோ அவள் என் காதலியாக இருந்திருக்கவேண்டும். அவளை நான் பார்த்திருக்கிறேன்; அவளோடு பேசியிருக்கிறேன்; அவளும் நானுமாய் யுகம் யுகாந்திரமாய்க் கொஞ்சி மகிழ்ந்திருக்கிருேம்.

என் கண்ணை ஒரு கணமேனும் இமைத்து, அவள் நின்ற அந்தக் காட்சியை நான் இழக்க விரும்பவில்லை. தவத்தின் முடிவில் பக்தனுக்குத் தேவி காட்சியளிப்பது போல், வந்தது போலவே திடீரென்று மறைந்து விட்டால் என்ன செய்வது? அதை நான் எப்படிச் சகிப்பேன்? கவிதையின் உணர்ச்சியால் என் கண்கவில் நீர் துளிர்விட்டிருப்பதை உணர்ந்துங்கூட நான் அதைத் துடைக்கவில்லை. 'ஜல் ஜல்' என்று குலுங்கும் சதங்கை ஒலியோடு அவள் வீட்டிற்குள்ளே நுழைந்தாள்.

'முதற் கவிதை' கொடுத்தவளின் முதற் சந்திப்பு அது.

பிறகு எல்லாம் வழக்கம் போலவே நடந்தன. புதிதாய் அடுத்த வீட்டிற்கு வந்த அவளது அப்பா அந்த வீட்டையே விலைக்கு வாங்கிவிட்டார். நான் அவளையே விலைக்கு வாங்கின மாதிரி அதிகாரம் செய்யத் தொடங்கினேன். மாமாவும் அத்தையும் என்னிடம் சொல்லிப்பார்த்து எதுவும் நடக்காவிட்டால் அவள் தயவை நாடிக் காரியத்தைச் சாதித்துக் கொண்டனர். சில சமயம் என்னை அதட்டி அதிகாரம் செய்வாள்; சில சமயம் பல்லைக் காட்டிக் கொஞ்சுவாள்; சில சமயம் தரையில் விழுந்து கண்ணீர் விடுவாள். எனக்குத் தர்ம சங்கடமாகத் தோன்றினுலும் அவளை அசட்டை செய்ய முடியவதில்லை.

காலையிலிருந்து இன்னும் குளிக்கவில்லையா? சீக்கிரம் போய்க் குளித்துவிட்டுச் சாப்பிடுங்கள்."

"சரி."

"தலைமயிர் காடுபோல் கிடக்கிறதே, கொஞ்சம் வாரி விட்டுக் கொள்ளக் கூடாதா?"

"சரி."

"வேஷ்டி சட்டையைத் துவைத்துக் கட்டினால் என்ன? ஒரே அழுக்காயிருக்கிறதே!"

"சரி."

"எதற்கெடுத்தாலும் ஒரே 'சரி' தானா? உங்களுக்கு இந்த வீட்டில் செல்லம் கொடுத்துக் கெடுத்துவிட்டார்கள். இன்னும் என்ன பச்சைக் குழந்தையா நீங்கள்? குழந்தையா யிருந்தாலும் கன்னத்தில் நாலு அறைவிட்டுப் பயமுறுத்த லாம்."

"சரி பாட்டி! நான் குழந்தைதான். அறை கொடுக் கிறாயா?—எங்கே?"

இருவரும் விழுந்து விழுந்து சிரிப்போம்.

மாமா என்னை மனிதனாக்கப் பட்ட பாடுகள் எல்லாம் தோற்றுவிட்டன. நாலு இடங்களில் எனக்கு வேலைவாங்கி வைத்தார். ஒவ்வொரு இடத்திலும் மூன்றுநாள்கூட என்னால் இருந்து உழைக்க முடியவில்லை. கவிதை எழுதுகிற வனுக்குக் கைகட்டிச் சேவகம் செய்யமுடியுமோ?

அவள் போக்கும் எனக்கு விசித்திரமாக இருந்தது. பண மும் படிப்பும் உள்ள குடும்பத்தைச் சேர்ந்த அவள், இப்படி ஏன் ஓர் சோம்பேறியிடம் பரிவு காட்டுகிறாள்? நான் கவிதை படிக்கத் தொடங்கிவிட்டால் வாயில் ஈ நுழைவது தெரியாமல் எதிரே உட்கார்ந்து கேட்டுக் கொண்டிருப்பாள். மகுடி ஊதுகிறவனுக்கு முன்னே நல்ல பாம்பு கிறங்கிப் போய் தலைதூக்கி நிற்குமே, அதே நிலைதான்.

அவள் இல்லாதபோது நான் அனுபவித்த வேதனைகள் சொல்லமுடியாதவை. அந்த வேதனைகள் முதல் முதலில் என்னுள்ளத்தில் கவிதையாகப் பிறந்திருக்க வேண்டும். பிறந்த கவிதை உள்ளே இருந்து கொண்டு வெளியே

வராமல் தவிக்கும்போது ஒரு கவிஞன் படுகிறபாடு உனக்குத் தெரியுமா? கருவில் வளரும் சிசு கடைசி மாதத்தில் புரண்டு புரண்டு தன் தாய்க்குக் கொடுக்கும் வலியின் உணர்வு இப்படித்தான் இருக்க வேண்டும்!

கவிதை உள்ளே இருந்து கொண்டு என்னைக் காதலைப் போலவே படாதபாடு படுத்தியது. எப்போதும் நெஞ்சுக்குள் ஒரே நமைச்சல். ஒரே தவிப்பு, ஒரே கும்மாளம். ஆனால் நெஞ்சுக்குள்ளே இருந்த கவிதை வெளியே வரவேண்டுமே? அதுதான் இல்லை.

ஊமையன் கண்ட கனவைப்போல் ஆகிவிடுமோ என்ற அச்சம் எனக்கு.

இந்த நிலையில் மாமாவின் தம்பி இலங்கையிலிருந்து வந்து சேர்ந்தார். திரும்பிப் போகும்போது என்னையும் கூட அழைத்துப்போக முடிவுசெய்துவிட்டாராம்! ஆரம்பத்தில் மூர்க்கத்தனமாக அவருடன் எதிர்த்து வாதாடினேன். தோல்வி எனக்குத்தான். இலங்கையின் இயற்கை அழகை வர்ணித்தார். மலைகளையும், காடுகளையும், அருவிகளையும் எடுத்துச் சொன்னார். தமிழ் வளரும் யாழ்ப்பாணத்தையும் குறிப்பிட்டார். ஒரு வருஷமாவது தங்கித் திரும்பலா மென்று மன்றாடினார்.

எனக்குக்கூடக் கொஞ்சம் சபலந்தான். ஆனால் மலைகள் இருந்தென்ன? மரங்கள் இருந்தென்ன? அவள் அங்கு என்னோடு இருக்கமாட்டாளே! இதை நான் எப்படி என் சின்ன மாமாவிடம் சொல்வது? என்னையும் அவளையும் தவிர மற்ற எல்லோரும் என் பயணத்தை நிச்சயப்படுத்திவிட்டார்கள். இன்னும் ஒரு வாரத்தில் நான் கப்பலேற வேண்டும்.

ஒரு வாரம் இருந்தது. ஏழு நாட்கள் இருந்தன. அதன் பிறகு கடலுக்கு அப்பால் நான்—இந்தக் கரையில் அவள்.

முதல் மூன்று நாட்களும் அவள் என்னைத் தனிமையில் கண்டபோதெல்லாம் அழுதாள். காணாதபோதும் அவள் அழுத அழுகையை அந்தக் கண்கள் கூறின. புத்தி ஸ்வாதீனம் இழந்தவள்போல் என்னைத் திரும்பத் திரும்பப் படிக்கச் சொல்லிக் கவிதை கேட்டாள். இன்னும் ஒரு வருஷத்திற்குக்

கேட்க வேண்டிய பாடல்கள் அத்தனையும் இந்த ஒரு சில நாட்களில் கேட்க நினைத்தாள் போலும்.

நான்காவது நாள் மாலைப் பொழுதில் அறையில் வழக்கம் போல் சோம்பலாக உட்கார்ந்திருந்தேன். அறைச் சன்னலுக்கு வெளியே செடியில் பூத்திருந்த ஒரு ஜோடி ரோஜா இதழோடு இதழ் ஒட்டி இன்பந் துய்த்துக் கொண்டிருந்தன. அதையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தேன், கண்ணிமைக்காது. பூஞ்சிட்டு இரண்டு அந்தச் செடியின் மற்றொரு கிளையில் அலகோடு அலகிணைத்துக் கொஞ்சின. நீண்ட பெருமூச்சு சீறிக்கொண்டு வெளியே வந்தது எனக்கு.

"என்ன அப்படிப் பெரிய யோசனை?"

அவள் வந்து நின்றாள்; சுவர் ஓரமாய்த் தரையில் உட்கார்ந்தாள்.

"உன்னுடைய நினைவாக எனக்கு என்ன தரப் போகிறாய்? நான் திரும்புவதற்கு ஒரு வருஷம் ஆகுமே!"

"நினைவைவிட உயர்ந்த பொருள் ஏதும் இருக்கிறதா?"

"அந்த நினைவிற்கு ஓர் உருவம் தரக்கூடாதா?"

"நினைவிற்கு உருவமா! என்ன அது?"

"சொல்லட்டுமா?...சொன்னால் கொடுப்பாயா?"

"கொடுக்கக் கூடியதை முன்பே கொடுத்துவிட்டேன். உயிரும்உள்ளமும் இப்போது என்னிடமில்லை. அது உங்களைத் தொடர்ந்து கொண்டே வரும்."

"அதோ பார்!" என்று சன்னலுக்கு வெளியே அவளுக்கு அந்த ரோஜா இதழ்களைக் காட்டினேன். என் இதழ் துடிக்க அவள் இதழை நோக்கினேன்.

"என்ன!" அவள் வாரிச் சுருட்டிக்கொண்டு எழுந்தாள். கண்களில் அனல் தெறிக்க என்னைப் பார்த்துவிட்டு வெளியேறினாள்.

நான் அப்படியே உட்கார்ந்திருந்தேன். நேரம் போனது தெரியவில்லை. வெளியில் மாலைப்பொழுது மங்கிக்கொண்டு வந்தது. பூஞ்சிட்டுகள் எங்கோ பறந்துவிட்டன. ரோஜாவும் ரோஜாவும் மாத்திரம் முன்போலவே ஒன்றாய்க் குலுங்கின.

விளக்கு வைக்கும் சமயம் அவள் மீண்டும் வந்தாள். உள்ளே நுழையாமல் பயங்கலந்த பார்வையோடு வெளியில் கதவருகில் நின்ருள். நான் வேதனையோடு சிரித்தேன்.

"பயப்படாதே! உன்னையறியாமல் ஏதும் நடக்காது."

முகத்தைத் திருப்பிக் கொண்டு ஆத்திரத்தோடு அவள் போய்விட்டாள். மறுநாள் வந்தது; அவளும் வந்தாள். அப்போதும் அவளிடம் அதே கேள்விதான்.

"நீங்கள் முரடர்; பிடிவாதக்காரர்; பைத்தியம்!"

"இருக்கட்டுமே; என்னைப்பற்றி உனக்கென்ன கவலை?"

கூரிய வேல்கொண்டு நெஞ்சைக் கிளறுவதுபோல் அவள் கண்கள் என்னை ஊடுருவின. அலட்சியமும் வெறுப்பும் நிறைந்த கண்களால் நான் பதிலளித்தேன். அவள் என்னை அவமானப்படுத்துவதாகத் தோன்றியது. இருக்கட்டும். இன்னும் இரண்டொரு நாளைக்குள் அவளைப் பழிக்குப் பழி வாங்க வேண்டும்! ஊருக்குப் போனபிறகு அவள் அதை நினைத்து நினைத்து உருகவேண்டும். ஒரு பெண்ணுக்கு இத்தனை பிடிவாதமா?

ஊருக்குப் புறப்படுவதற்கு முதல் நாளே நான் எதிர்த் தாக்குதலுக்குத் தயாரானேன். காலையில் என்னைத் தேடி வந்தவளின் முகத்திற்கு நேரே கதவைச் சாத்தித் தாளிட்டேன். பிறகு நான் வெளியே புறப்படும்போது அவள் குரல் பின் தொடர்ந்தது.

"எங்கே போகிறீர்கள்?"

நான் பதில் சொல்லவில்லை. அந்த ஊரில் அவளைச் சந்திப்பதற்கு முன்பு நான் வழக்கமாகச் சுற்றித் திரியும் ஓர் குளத்தங்கரையும் கோயிலும் உண்டு. அங்கு போய் அரச மரத்தடி நிழலில் உட்கார்ந்தேன்; மனம் அதிகமாகப் புண் பட்டிருந்தது. காதலுக்காக இத்தனை துன்பத்தை ஒருவன் அனுபவிக்க வேண்டுமென்ருல் காதலிக்காமலே இருந்திருக்கலாமே! இந்த உலகத்தில் காதலில் சிக்கித் திணறுவதைப் போல் முட்டாள்தனம் வேறென்றும் இருக்கமுடியாது.

ஊருக்குப் புறப்படுகிறவரையில் அவள் முகத்தில் விழிக்கக்கூடாது. கடைசி நிமிஷத்தில் மட்டும் முகத்தை

வேறு பக்கம் திருப்பிக்கொண்டு, "நான் உன்னைக் காதலிக்கவே இல்லை. சந்தோஷமாய் உன்னை மறந்துவிட்டு வெளிநாடு போகிறேன்" என்று சொல்லவேண்டும். அப்போது அவளுக்கு எப்படி இருக்கும்?

வேண்டுமென்றே இரவில் நேரங்கழித்து வீட்டிற்குத் திரும்பினேன். மத்தியானம் நண்பன் வீட்டில் சாப்பிட்டதாய் ஒரு பொய் சொல்லவேண்டியிருந்தது. நல்ல வேளையாக அப்போது அவள் அங்கு இல்லை. அத்தைதான் என்னிடம் அதிக வருத்தப்பட்டுக் கொண்டாள்.

"உனக்கு அவளோடு என்ன கோபம்? இரண்டு நாளாய் முகங்கொடுத்துப் பேசுகிறதில்லையாமே? ஊருக்குப்போகும்போது இப்படியா நடந்து கொள்வது? அவளுக்கு அழுதழுது முகம் வீங்கிப்போய்விட்டது. நாளைக்கு அவள்தான் உன்னைக் கல்யாணம் செய்து கொள்ளப்போகிறுள்."

அத்தையின் மனம் இப்போதுதான் எனக்குத் தெரிந்தது ஆனால் அவளுடைய மனம் அத்தைக்குத் தெரியவில்லையே!

"நான் ஒன்றும் அவளைக் கல்யாணம் செய்து கொள்ள முடியாது. கர்வம் பிடித்தவள்."

அன்று இரவு எனக்கு அரைமணி நேரங்கூடத் தூக்கமில்லை. நடுச்சாமத்தில் தனக்குத்தானே பிதற்றிக்கொண்டிருப்பதை உணர்ந்தேன்.

மறுநாள் பொழுது விடிந்தது. பொழுது போய் இரவு 9-மணிக்கு ரெயிலில் புறப்படவேண்டும். அதற்கடுத்த நாள் தான் தனுஷ்கோடியிலிருந்து கப்பல். பிற்பகல் நாலுமணி வரையில் புறப்படுவதற்குத் தயார் செய்கிற பாவனையில் சுறுசுறுப்பாய் அங்குமிங்கும் அலைந்தேன். அவள் என்னைச் சந்திக்கச் செய்த முயற்சிகளையெல்லாம் புறக்கணித்தேன்.

இன்னும் மூன்று மணி நேரம் சென்றுவிட்டால் அவளுக்கும் எனக்கும் மத்தியில் உள்ள இடைவெளி நிமிஷத்திற்கு நிமிஷம் அதிகமாகிக் கொண்டே போகும். காதலித்த இருவருக்கும் சரியான தண்டனைதான் அது!

சாயங்காலம் மெதுவாக நழுவி அரசமரத்துப் பக்கம் நடந்தேன்.

யாருக்கும் தெரியாமல் கண்ணீர் வடித்து இருதயத்தை இலேசாக்கிக்கொள்ள வேண்டும் போலிருந்தது. உலகமே சூன்யமாய்ப் போய்விட்டது போன்ற ஒரு உணர்ச்சி.

அரசமரத்தின் நிழல் நீண்டது. கிளிக்குஞ்சுகள் மரப் பொந்துகளில் எட்டிப் பார்த்தன. காக்கைக் கூட்டம் திரும்பி வந்து கூடுகளில் தஞ்சம் புகுந்தது. இருட்டிக் கொண்டு வந்ததால் மெதுவாகத் திரும்பி நடந்தேன்.

திடீரென்று விம்மலும் விக்கலும் கேட்டது, திரும்பினேன். வாயில் துணியை வைத்து அழுகையை அடக்கப் பார்த்தாள் அவள். அவளையும் மீறிவிட்டது அவள் உணர்ச்சி.

"என்னைப் பார்க்க மாட்டீர்களா?"

"ஏன் இங்கு வந்தாய்?"

"என்மேல் உங்களுக்குக் கோபமா?"

"கோபமுமில்லை, காதலுமில்லை; உன்னைப்பற்றி நான் நினைக்கவுமில்லை."

"என்னை மன்னிக்க மாட்டீர்களா?"

"எதற்கு மன்னிப்பு?" நான் வேகமாக வீட்டை நோக்கி நடந்தேன். அவள் பின்தொடர்ந்தாள். சந்தடியற்ற தெருவின் வழியே நாங்கள் கவனிப்பாரற்று நடந்தோம். "காதல் என்பது நாகப்பாம்பின் விஷம் என்று எனக்குத் தெரியாது. நீ தீண்டிவிட்டு இப்போது வேடிக்கை பார்க்கிறாய். நான் அதனால் சாகப்போகிறேன்!"

"ஐயோ!" என்று அவள் கத்தினாள். "ஊருக்குப் போகும் போது அப்படிச் சொல்லாதீர்கள். உங்களுக்கு என்ன வேண்டும்?" அவளுடைய கரம் என் வாயைப் பொத்தியது.

நான் என்ன செய்தேன் என்று மறுகணம் எனக்குத் தெரியவில்லை. என் இதழ் கண்ணீர்க் கரையின் உவர்ப்புப் படிந்த மற்றொரு இதழின் ஈரத்தைச் சுவைத்தது. மிருதுவான மார்பகத்தின் பயம் நிறைந்த துடிதுடிப்பை உணர்ந்தேன். சுற்றியிருந்த உலகமனைத்தும் ஒரு கணம் எங்களுக்காக வேண்டுமென்றே கண் மூடிக்கொண்டது போல் ஒரு மாயக் கற்பனை.

அதன்பின் நாங்கள் நடந்தோம். நான் தரையில் நடந்தேனா காற்றில் மிதந்தேனா என்பது எனக்குத் தெரியவில்லை. ஆனால் அவள் அழுதாள். தேம்பித் தேம்பி அழுதாள். நான் என்ன சொல்லியும் அவள் கேட்கவில்லை. அழுகையும் தேம்பலும் முடிந்தவுடன் என்னிடம் முதற் கேள்வியாக இதைக்கேட்டாள்: ''மறந்துவிட மாட்டீர்களே?''

திரும்பத் திரும்ப இதையே கேட்டாள். ''மறந்துவிட மாட்டீர்களே!...மறந்துவிட மாட்டீர்களே!''

நெஞ்சை இருகூறாய்ப் பிய்த்தெடுத்து ஒரு பகுதியை மட்டும் அங்கே விட்டு வருவதுபோல் அவளைத் தனியே விட்டு இலங்கை வந்தேன். போரில் வெற்றி பெற்றால் வெற்றி பெற்றவர் ஆனந்தம் கொள்வதுண்டு. ஆனால் நான் பெற்றது வெற்றிதானா? அப்படியானால் ஏன் அவள் அந்தச் சம்பவத்திற்குப் பிறகு தேம்பித் தேம்பி அழவேண்டும்? புத்தம் புது மலரைக் கசக்கி முகர்ந்த மூர்க்கனா நான்?

இலங்கையின் இனிய காட்சிகள் எனக்கு இன்பமளிக்கவில்லை. கவிதைப் புத்தகங்கள் கனத்த என் மனச் சுமையைக் குறைக்கவில்லை. இன்பம் என்று நினைத்ததெல்லாம் வெறும் மாயமாய்த் தோன்றியது. அவளுடைய துன்பத்தில் பெற்ற சுகம் இன்பமாகுமா? அவள் இப்போது என்னைப் பற்றி என்ன நினைப்பாள்?

நான்கு நாட்கள் சென்றன. சித்திரவதை தாங்க முடியவில்லை. கவிதை உணர்வு கானல் நீராகுமோ என்ற அச்சம்.

நான் சிறிதும் எதிர்பாராமல் அவளுடைய முதல் கடிதம் வந்தது. படித்தேன். என் கண்களை நம்பமுடியவில்லை. மீண்டும் படித்தேன். உள்ளம் துள்ளியது.

அதில் அவள் எழுதியிருந்தாள் :—

''முதல் முதலில் நான் உங்களைச் சந்தித்தபோது நீங்கள் பாடிக்கொண்டிருந்த ஆண்டாள் பாசுரம் உங்களுக்கு நினைவு இருக்கிறதா? என்னால் அதை மறக்க முடியாது.

''கற்பூரம் நாறுமோ? கமலப்பூ நாறுமோ? திருப் பவளச் செவ்வாய்தான் தித்தித்து இருக்குமோ?''

என்னுடைய பதில் என்ன தெரியுமா?—தித்தித்திருக்குதே! தித்தித்திருக்குதே! தேனைச் சுவைக்குதே! —உங்களுக்குப் புரிகிறதா?

"ஒன்றைக் கொடுக்க மறுத்தேன். ஓராயிரம் கொடுக்க ஏங்குகிறேன். சீக்கிரம் வாருங்கள். வந்து என்னைக் கல்யாணம் செய்து கொள்ளுங்கள். இல்லையேல் என் உயிர் நில்லாது."

நண்ப, நானும் அவளும் இப்போது கிழவனும் கிழவியும் ஆகிவிட்டோம். எதற்கெடுத்தாலும் சண்டை போட்டுக் கொள்கிறோம். கவிஞனோடு வாழ்வதில் உள்ள கஷ்டங்கள் அவளைப் பெரிதும் பாதித்துவிட்டன. சில சமயங்களில் அவள் என்மீது எப்படி எரிந்து விழுகிறாள் தெரியுமா? என்னால் சகிக்க முடியாத அளவுக்கு அவளுடைய ஆத்திரம் போய்விட்டால், அப்போது மாத்திரம் அவளெதிரே நான் அந்த முதற் கவிதையைப் பாடுவேன். கவிதையா அது? மந்திரச் சொல்! சின்னஞ்சிறு சிற்றிடைக்காரியாக மாறி, ஓடிவந்து என் கழுத்தை வளைத்துக் கொள்கிறாள்; கொஞ்சுகிறாள்; மயங்குகிறாள். என்னையும் அவளையும் காலன் என்ன செய்துவிடுவான்? என்னுடைய கவிதையும் சரி, காதலும்சரி, காலத்தை வென்றதப்பா! காலனை நான் காலால் உதைப்பேன்! என் காதல் அவனைக் காறி உமிழும்!

இலங்கையில் அவளுடைய கடிதத்தைக் கண்டவுடன் பிறந்த முதற் கவிதை அது. இத்தனை நாள் அடைபட்ட கற்பனை ஊற்று எப்படியோ பீரிட்டுக் கிளம்பியது. கவிதா தேவி என்நாவில் நர்த்தனமாடினாள்—போதுமா என் முதற் கவிதையின் கதை? கவிஞன் தன் வாழ்வைத்தான் காவியமாக்குகிறான். என் வாழ்வின் ரகசியங்களை இன்னும் அதிகமாய்த் தெரிந்து கொள்ள வேண்டுமென்றால் திரும்பத் திரும்ப என் கவிதைகளைப் படி!

கவி கண்ணப்பரின் முதற் கவிதையில் சில வரிகள் என் நினைவுக்கு வந்தன.

**இதழோடு இதழ்சேர்ந்த இன்பக்கதை சொல்லடி!**
**கன்னத்தோடு கன்னம் சேர்ந்த காதற்கதை சொல்லடி!**



# மூன்று வேளை

திருச்சி நகரத்துப் பிச்சைக்காரர்களை யாராவது ஒரே கூட்டமாய்ப் பார்க்க ஆசைப்பட்டால், அவர்கள் சனிக்கிழமை காலை ஒன்பது மணி சுமாருக்குத் தென்னூர் பட்டாபிராமப் பிள்ளை தெருவுக்குப் போனால் போதும். எச்சில் கையால் காக்காய் ஓட்டத் தெரியாத பிரமுகர்கள் மலிந்து வரும் இந்த நாளில், அங்கே வட்டித் தொழில் செய்யும் செட்டிமார்களில் சிலர் இன்னும் தங்கள் பரம்பரைக் குணமான ஈவு இரக்கத்தை மறக்கவில்லை. ஒரு செட்டியார் ஏழைகளுக்கு அன்று ஒருவேளைக் கஞ்சி ஊற்றுகிறார்; இன்னொருவர் காசு கொடுக்கிறார். இதனால் பிக்ஷைக்கார உலகத்தில் அவர்களுக்கும் அந்தத் தெருவுக்கும் கிராக்கி அதிகம். இரண்டு பர்லாங்கு நீளமுள்ள அந்தத் தெருவில் எங்கே பார்த்தாலும் ஒரே பிச்சைக்கார மயமாக இருக்கும்.

விர் விர்ரென்று ஐம்பது மைல் வேகத்தில், தங்கள் எஜமானர்களையோ எஜமானிகளையோ காரில் வைத்துக் கொண்டு பறக்கும் டிரைவர்களுக்கு மாத்திரம் அன்றைக்குச் சோதனைக் காலமாக இருக்கும். மழைக்காலத்தில் நெளியும் புழுக்களைப் போல் தெருவில் குறுக்கும் நெடுக்கும் பிறந்த மேனியாய் நடக்கும் பிச்சைக்காரப் பிஞ்சுகளைப் பார்த்து வள் வள்ளென்று எரிந்து விழுவார்கள். பங்களாவின் உப்பின் மகிமை அதன் வாசலில் கட்டியிருக்கும் நாயிடந்தான் அதிகமாய்த் தெரியும்.

கையில்லாத நொண்டி, காலில்லாத முடம், கண்ணற்ற கபோதி, மூக்கற்ற மூளி, அங்கம் அழுகிப்போன அவந்தரை இன்னும் எத்தனை எத்தனையோ. அவர்களோடு நூற்றுக் கணக்கான திக்கற்ற பெண்பிள்ளைகளையும் அங்கே காணலாம்.

ஒரு சனிக்கிழமை. வழக்கம்போல் நகரத்தின் நாலுபுறங்களிலிருந்தும் பிச்சைக்காரர்கள் அங்கு வந்து குவிந்து கொண்டிருந்தார்கள். ஏற்கனவே அதிகாலையில் அங்கு வந்து சேர்ந்த பத்துமாதக்காரி ஒருத்திக்குத் திடீரென இடுப்புவலி கண்டது. தனக்குள்ளாகவே மெதுவாக முக்கிப் பார்த்தாள்; முனகிப் பார்த்தாள்; வலி பொறுக்க முடியவில்லை. மெதுவாகக் கூட்டத்தை விட்டு எழுந்து ஓர் ஒதுக்குப் புறத்துக்கு நகர்ந்தாள். அவளோடு சில நாட்களாய் ஒட்டிக் கொண்டிருந்த நொண்டிக் கிழவிக்கு நிலைமை தெரிந்து விட்டது. அவளும் பிள்ளைத்தாய்ச்சியைப் பின் தொடர்ந்தாள்.

தெருவில் மனிதர்கள் சுறுசுறுப்பாய்ப் போய் வந்து கொண்டிருந்தார்கள். சைகிள்களின் மணியோசை காதுகளை அடைத்தது; கார்களின் பரபரப்புக்கு எப்போதுமே அந்தத் தெருவில் பஞ்சமில்லை. பத்துமாதக்காரி சுற்றும் முற்றும் பார்த்தாள். ஒதுங்குவதற்கு ஓர் இடத்தையும் காணவில்லை. ஆனால் நிதானிக்க நேரமில்லை. புதிய உயிர் ஒன்று இந்த உலகத்தைப் பார்க்கத் துடித்த துடிப்பு அவளுக்கு எமவாதனையாக இருந்தது.

நாலாபுறமும் ஒரு கணம் திரும்பிப் பார்த்தாள். பட்டப் பகல்; நட்ட நடுத்தெரு; கண்ணை அடைத்துக் கொண்டு வந்தது அவளுக்கு. நகரசபைக் குப்பைத் தொட்டி ஒன்று சாக்கடைக்குப் பக்கத்தில் இருந்தது. சாக்கடைக்குப் பின்னால் பழைய காலத்துக் காம்பவுண்டுச் சுவர். இந்த இடைவெளியை, சுவருக்கும் குப்பைத் தொட்டிக்கும் மத்தியில் உள்ள இரண்டடிச் சாக்கடைக் கரையை, அவளுடைய மங்கிய கண்கள் கண்டுபிடித்தன. தள்ளாடிக் கொண்டே வந்து குப்பைத் தொட்டியின் விளிம்பைப் பற்றிக்கொண்டு உட்கார்ந்தாள்.

உலகம் அவளுடைய கண்களுக்கு முன்னால் செத்துக் கொண்டு வந்தது. எங்கும் ஒரே பிரேதக் களை.

"ஐயோ, அம்மா!" என்று அவள் தன் அடக்கத்தையெல்லாம் மறந்து அலறினாள். குரல்வளையை யாரோ

இறுக்கிப் பிடிப்பதுபோல் மூச்சுத் திணறல். அதே சமயம் அங்கு வீரிட்டழும் சின்னஞ் சிறு குரல் ஒன்று அவள் காதுகளுக்குக் கேட்காமல் இல்லை. நொண்டிக் கிழவி அவசர அவசரமாக ஓடிவந்து அதைக்கைகளில் ஏந்திக் கொண்டாள்.

"அடி,சுப்பி! ஆம்பிளைப் புள்ளேடி!" என்றாள் கிழவி. அவளுடையபொக்கைவாய் அப்படியே வெளியில் தெரிந்தது.

இதற்குள் தெருவில் சிறு கூட்டம் கூடிவிட்டது. முதலில் ஒரு நடு வயசுப் பெண்பிள்ளை மாத்திரம் வந்து நின்றாள். அடுத்தாற்போல் ஒரு சிறுமி; அவளை அடுத்து ஒரு கிழவி; இப்படியே பெண்களின் கூட்டம் இடித்துப் புடைத்துக் கொண்டு அங்கு நின்றது. ஆண்கள் இரண்டொருவர் ஒதுங்கி நின்று விவரத்தைக் கேட்டார்கள். அவர்களுக்கு அங்கு நிற்கவும் பிடிக்கவில்லை; அதை விட்டுப் போகவும் பிடிக்கவில்லை.

இரண்டு பெண் குழந்தைகள் தங்களுக்குள் பேசிக் கொண்டன:

"ஏன் அந்தப் பிச்சைக்காரி அப்படி அழுகிறா?"

"அவளுக்கு பிள்ளை பிறந்திருக்கு."

"அடபாவமே! பிள்ளை பிறந்தா இப்படித்தான் அழுவாங்களா?"

இதற்குள் கூட்டத்திலுள்ள சிலர் உதவி செய்யத் தலைப் பட்டார்கள். பக்கத்து வீட்டிலிருந்து நஞ்சுக்கொடி அறுப்பதற்குப் பேனுக் கத்தி வந்தது. ஒரு பெண் குழாயடியில் தண்ணீர் பிடித்துக்கொண்டு வந்து குழந்தையைக் கழுவச் செய்தாள். பழந் துணிகள் நாலைந்து சேர்ந்தன. சுடச் சுடக் காபி கொண்டுவந்து நொண்டிக் கிழவியின் மூலம் கொடுத்துக் குடிக்கச் செய்தார்கள். இட்டிலி தோசைகள் இரண்டு வீட்டுப் பெண்களிடமிருந்து கிடைத்தன. தெருவில் போன ஆண்கள் சிலர் காசுகளை வீசி எறிந்தார்கள்.

படித்த மனிதர் ஒருவருக்கு யோசனை தோன்றியது; "முனிசிபல் வார்டுக்குச் சொல்லி அனுப்பினால் அவர்கள் இவளுக்கு உதவுவார்களே" என்றார்.

யோசனை சொல்லத்தான் அவருக்குத் தெரியும். அதைச் செய்யத் தெரியாது. அவர் வேகமாய் நடந்து விட்டதால், அதைக் கேட்டுக் கொண்டிருந்த பெண் ஒருத்தி, "ஐயா, யாராவது கொஞ்சம் சொல்லி அனுப்புங்களேன்; உங்களுக்குப் பெண்டு பிள்ளை இல்லையா?" என்று விலகி நின்று கொண்டிருந்த இரண்டு ஆண்களிடம் கேட்டாள். இருவரும் முனிசிபல் வார்டுக்குப் புறப்பட்டார்கள்.

பிச்சைக்காரக் கூட்டம் இதில் ஒன்றும் அக்கறை காட்டவில்லை. வேடிக்கை பார்க்க வந்தால் காலணுக் காசும் 'கஞ்சித் தண்ணி'யும் காத்துக் கொண்டிருக்குமா? கஞ்சி ஊற்றும் கைங்கரியம் தொடங்கிவிட்டதால் மும்முரம் அந்தப் பக்கம் அதிகரித்தது.

கூட்டம் இப்போது முன்போல் அதிகம் இல்லை. நொண்டிக் கிழவி பெற்றவளுக்கருகில் குழந்தையைக் கிடத்தி விட்டுக் காசுகளைப் பொறுக்கினாள். எட்டணாவும் சில்லறையும் இருந்தன. கிடைத்த இட்லி தோசைகளை இருவரும் சாப்பிட்டார்கள். இந்த மாதிரிச் சாப்பாடு சாப்பிட்டு எத்தனையோ மாதங்கள் ஆகியிருக்கும்.

நகரசபை ஊழியர் ஒருவர் காக்கிச் சட்டையும் தொப்பியுமாக வந்து சேர்ந்தார். கூட்டத்தை அதட்டி விலக்கினார்.

"ஏய், கிழவி! அவளை என் பின்னால் வரச்சொல். ஆஸ்பத்திரியிலேயே நல்லாக் கவனிப்பாங்க."

"எப்படிங்க வரச் சொல்றது?"

"குழந்தையைத் தூக்கிக்கிட்டு நடந்து வரச் சொல் புள்ளே!"

கிழவி வெறுப்போடு அந்த ஆளைப் பார்த்தாள்.

"ஆம்பிளைங்களுக்கு இடுப்புவலி கண்டா அப்போ தெரியும். நீங்க பாட்டுக்குப் போங்கய்யா. இவளுக்கு நீங்க ஒண்ணும் செய்யவேண்டாம்."

வந்தவருக்குத் தலைகுனிவாய்ப் போயிற்று. ஒரு கணம் எதையோ யோசனை செய்தார். பிறகு வேகமாகச் சைக்கிளில் கிளம்பினார்.

நேரம் ஆகிக்கொண்டிருந்தது. தெருவில் போக்கு வரத்து அதிகமில்லை. காரியங்கள் தொடங்கும் நேரம்முடிந்து விட்டதால் கல கலப்புக் குறைந்தது. சூரியன் மட்டும் சுள்ளென்று வெயிலைப் பாய்ச்சினான். தார் ரோடு சூடேறி நெகிழத் தொடங்கியது. பக்கத்தில் வெயிலுக்கு ஒதுங்க அவர்களுக்கு ஓர் கூரையோ மர நிழலோ இல்லை. குப்பைத் தொட்டியின் நிழல் முற்றும் மறைந்து, பெற்றவளையும் பிள்ளையையும் சூரியனுக்குக் காட்டிக் கொடுத்தது.

"நான் பிள்ளையைத் தூக்கிக்கிறேன். எங்கேயாச்சும் நிழலுக்குப் போவோம் வர்றயா?" என்றாள் கிழவி.

எழுந்து வர அவளுக்கு உடம்பில் தெம்பு இல்லை. ஆனால் தரையோ அடுப்பிலிட்ட தோசைக் கல்லாய் மாறிக் கொண்டு வந்தது.

திடீரென்று புத்தம் புதிய மோட்டார் ஒன்று அங்கே வந்து நின்றது. பெரிய கார். செஞ்சிலுவை அடையாளம் வெளியே தெரிந்தது. அதற்குள்ளிருந்து முன்பு வந்து விட்டுத் திரும்பிப் போன காக்கிச் சட்டைக்காரர் இறங்கினார்.

"காரிலே ஏற முடியுமா புள்ளே? உன்னாலே முடியாமல் போனா நான் ஒத்தாசை பண்றேன்."

பிச்சைக்காரிகள் இருவரும் ஒன்றும் புரியாமல் விழித்தார்கள். இத்தனை பெரிய புத்தம் புதுமோட்டார் அவளையும் அவளுடைய மகனையும் ஏற்றிக்கொண்டு போகவா வந்திருக்கிறது? பயல் அதிருஷ்டக்காரன்தான்!

கிழவி காக்கிச் சட்டைக்கார மனிதரை நன்றியோடு பார்த்தாள். சற்றுமுன்பு அவரைக் கடுமையாகத் திட்டியது அவளுக்கு வருத்தமாக இருந்தது.

"தாயும் குழந்தையும் வந்தால் போதும். ஆஸ்பத்திரியில் கவனித்துக்கொள்வார்கள் நீ கவலைப்படாதே!"

கிழவியை விட்டுவிட்டுக் குழந்தையையும் தாயையும் சுமந்து சென்றது கார். பெரிய ஆஸ்பத்திரியில் பிரசவப் பகுதியில் அவளுக்கு ஒரு படுக்கை கிடைத்தது. வயசான ஒரு டாக்டரம்மாள் அவளை நேரில் வந்து கவனித்தாள். நர்ஸ் ஒருத்தி குழந்தையை அவளிடமிருந்து வாங்கிச் சென்றாள். அந்த ஆஸ்பத்திரிக் கட்டிடத்தையும், படுக்கைகளையும், குறுக்கும் நெடுக்கும் நடக்கிற மனிதர்களையும், அவர்கள் தனக்குச் செய்யும் உதவிகளையும் பார்த்த போது பிச்சைக்காரிக்குத் தன் கண்களையே நம்பமுடியவில்லை.

"பெரிய டாக்டர் ரொம்பக் கெடுபிடி. அதனாலேதான் இந்தக் குட்டி தெய்வங்களுக்கு இத்தனை சுறுசுறுப்பு!" என்று பக்கத்துப் படுக்கையில் யாரோ ஓர் அம்மாள் இன்னோர் அம்மாளிடம் மெதுவாகச் சொல்லிக் கொண்டிருந்தாள்.

"அதிகாரத்திலே இருக்கிற ஆண்பிள்ளை யோக்கியனாக இருந்தால் எல்லாம் சரியாகத்தான் நடக்கும்" என்று குடும்பப் பாணியில் பதில் கொடுத்தாள் மற்றவள்.

பிச்சைக்காரிக்கு ஒரே பிரமிப்பு. இத்தனை பெரிய கட்டிடத்துக்குள், இத்தனை விசாலமான அறையில், இந்த மாதிரி ஒரு மிருதுவான கட்டிலில் அவள் இதற்குமுன் இருந்ததே இல்லை. சுவரெங்கும் வெள்ள வெளேரென்று சுத்தமாக இருந்தது. பளபளப்பான சிமெண்டுத் தரை. சன்னல் வழியாக வெளியே தெரிந்த பூச்செடிகளைப் பார்த்தாள். காற்றில் அவை ஒய்யாரமாக அசைந்தாடிக்கொண்டிருந்தன.

ரொட்டித் துண்டுகளும் சூடான பாலும் அவளுக்கு ஆகாரமாய்க் கொடுத்தார்கள். ஏற்கனவே அவள் இட்டிலி காபி சாப்பிட்டிருந்தது உண்மைதான். என்றாலும் எத்தனையோ நாளைப் பசிக்கு அவையெல்லாம் எந்த மூலை? ரொட்டியும் பாலும் போனபிறகுதான் அவளுக்கு வயிறு நிறைந்த மாதிரி இருந்தது.

குழந்தையை அடுத்தாற்போல் தொட்டிலில் போட்டிருந்தார்கள். மெதுவாகக் குழந்தையை உற்றுப்பார்த்தாள். அவளுக்குப் பெருமை தாங்கவில்லை. உடனே வாரி அணைத்து அவனுக்குப் பாலூட்டவேண்டும்போல் இருந்தது. பாலூறிக் கொண்டிருந்த மார்பகத்தில் நமைச்சல் வேறு அவளுக்குப் புதுமையான தொந்தரவைக் கொடுத்தது. இது அவளுக்கு முதற் பிரசவம்; முதற் குழந்தை கொடுக்கும் முதல் அநுபவம்.

ஆனால் இந்த மாதிரிச் சாப்பாடு இப்போது அவளுக்கு இரண்டாவது வேளையாகக் கிடைக்கிறது. முதல் வேளைச் சாப்பாட்டைப் பற்றி அவள் நிதானமாக நினைத்துப் பார்த்தாள். இன்பக் கனவுகள் மெல்லப் படர்ந்தன.

## 2

சரியாகப் பத்து மாதங்களுக்கு முன்பு அவள் முதல் முறையாக் வயிறு நிறையச் சாப்பிட்டாள். அந்த முதல் வேளைச் சாப்பாட்டுக்கு முன்னும் பின்னும் நடந்த சம்பவங்களை அவளால் மறக்க முடியாது. நாக்கின் ருசி, வயிற்றின் பசி, உள்ளத்தின் ஏக்கம் எல்லாம் ஒன்றாய் அடங்கிய கதை அது.

அவளுடைய பாட்டியாக இருந்த கிழவி பத்திரகாளி பரம்பரையில் வந்தவள். அவளைக் கண்டால் பிச்சைக்காரக் கூட்டத்திலுள்ள பொறுக்கிப் பயல்களுக்கு உள்ளூற உதைப்பு. அவளுடைய பாதுகாப்பில் வளர்ந்ததால்தான் சுப்பி வெகுநாள்வரை பத்திரமாக இருக்க முடிந்தது.

''ஏண்டா பிச்சைக்கார நாய்களா, அவளை அப்படிப் பார்க்கிறீங்க? உங்க அக்கா தங்கச்சியைப் போய்ப் பாருங்கடா! கையாலாகாத கபோதிப் பசங்க!'' என்று காறி உமிழ்வாள் கிழவி.

ஆனால் இரண்டு நாள் ஜுரத்தில் அவளைச் சாவு வாரிக் கொண்டு போய்விட்டது. அவளுக்குத் தன் பேத்தியைத் தனியே விட்டுவிட்டுச் சாகவே மனமில்லை. 'சுப்பி, நீ சின்னஞ்

சிறுசு. நான் போனதுக்கப்புறம் ரொம்பக் கவனமா இருக்கணும், எவனுவது ஒருத்தனேடே மானமாப் பிழைக்கிறது தப்பில்லை. ஆனால்: கெட்டுப்போயிடக் கூடாது. உன் தாத்தா என்னை அடிச்சார், உதைச்சார், பண்ணுத சின்னமெல்லாம் பண்ணினுர். கடைசி வரையிலே அவருக்குச் சொந்தமாயிருந்திட்டேன். அவரும் போயிட்டார்; நானும் போகப் போறேன். பிச்சைக்காரியாச் செத்தாலும் பெருமையோடு சாகிறேன். உனக்கு ஒரு குறைவும் வராது.'

பாட்டி பரலோகம் போன பிறகு பேத்திக்கு பத்து நாட்கள் பத்து யுகங்களாய்த் தோன்றின. இளம் பிச்சைக்காரிகளுக்கு ஏனே சுப்பியைக் கண்டால் எரிப்பு. இளைஞர்கள் பல்லிளிப்பதும் பரிகாசம் பேசுவதுமாக இருந்தார்கள். அவளுடைய பாட்டி தன் வயிற்றை முழுப் பட்டினி போட்டாவது சுப்பிக்கு அரை வயிறு நிரம்பும்படி பார்த்து வந்தாள். அதனுல் அவள் உடல் மினுமினுப்பில் குறையவில்லை. பாட்டியின் பிரிவுக்கப்புறம் அவளுக்குப் பகலில் பசியும், இரவில் பயமும் துணை இருந்தன.

வெள்ளிக்கிழமை தோறும் பெரிய மார்க்கெட்டுக்குப் பக்கத்தில் சில கடைகளில் காசு கொடுப்பார்கள். வரிசையாக நின்று கையேந்தி வாங்கிச் சென்றது கூட்டம். சுப்பிக்கு முன்னுல் நாலு பேர்கள் தள்ளி, அங்கே புதிதாய் வந்து சேர்ந்த ஓர் ஆண்பிள்ளை நின்றுகொண்டிருந்தான். அவனைப் பார்த்தால் பிச்சைக்காரனைப் போல் தெரியவில்லை வெள்ளையும் சள்ளையுமாய் வாட்டசாட்டமாக இருந்தான். அவன் கையை நீட்டியபோது அவனுக்குப் பிச்சை கிடைக்கவில்லை; திட்டுக் கிடைத்தது.

"உனக்கென்னடா இங்கே வேலை? போய் மூட்டை தூக்கிச் சம்பாதிச்சால் என்ன?"

"நல்லாத் தூக்கறேனுங்க; கூலி தர்றீங்களா?"

"போடா! வேறே எங்கேயாச்சும் போ!"

சுற்றி இருந்த பிச்சைக்காரர்கள் 'கொல்'லென்று சிரித்

தார்கள். அந்த இளைஞனுக்கு அவமானம் தாங்க முடிய வில்லை. இந்த நிலையில் சுப்பி மட்டும் தன்னை அநுதாபத் தோடு கவனிப்பதை அவன் தெரிந்து கொண்டான். இன்னும் அவனுக்கு அதிக அவமானமாக இருந்தது.

அதற்காக அவன் பிச்சைக்காரர்கள் கூட்டத்தை விட்டு விலகிப் போய்விடவில்லை. அவர்கள் போகுமிடமெல்லாம் போய் அவர்களைப் போலவே கையேந்தினன். எங்கும் ஒரே மாதிரி வரவேற்புக் கிடைத்தது. "நொண்டியா, முடமா, பிச்சை எடுக்க?" என்று கேட்டார்கள்.

இந்தப் பஞ்சத்து ஆண்டியைக் கண்டு பரம்பரை ஆண்டி களுக்குப் பிடிக்கவில்லை. "இவனைப் போலத் தடிப் பசங்க ளெல்லாம் வரப் போய்த்தான் நம்ம பொழப்பே பாழாப் போச்சு!" என்றான் ஒருவன்.

ஒரு வாரமாக அவன் அந்தக் கூட்டத்தில் அடிக்கடி காணப்பட்டான். சுப்பியும் அவனும் அடிக்கடி சந்தித்துக் கொண்டார்கள். அவனுடைய வெளுப்புத் துணிகள் பழுப் பேறுவதையும் நல்ல உடல் பசியால் வெல வெலத்துப் போவதையும் சுப்பியால் கவனிக்கமால் இருக்க முடிய வில்லை. 'ஐயோ, பாவம்!' என்று நினைத்துத் கொள்வதைத் தவிர அவள் வேறு என்ன செய்வாள்! 'பட்டினிக்குப் பழக்கப் படாத ஆசாமி; இந்தக் கூட்டத்திற்கு இவன் லாயக்கில்லை' என்பது அவள் தீர்மானம்.

கோட்டை ஸ்டேஷன் ஆலமரத்தடியில் ஒரு நாள் சாப் பிட்டுக் கொண்டிருக்கும்போது, தூரத்தில் அவன் தனியாக இருப்பதைப் பார்த்தாள். சோர்ந்துபோய்க் களைப்பாக உட்கார்ந்திருந்தான். சுப்பி சாப்பிடுவதைக் கண்டவுடன் வேறு பக்கம் திரும்பிக் கொண்டான்.

சுப்பி தன் மனசைத் திடபபடுத்திக்கொண்டு முதல் முத லாக அவனிடம் பேசினாள். நெஞ்சு படபடவென்று அடித்துக் கொண்டது.

"இந்தா, கொஞ்சம் சோறு இருக்குது; சாப்பிட்றியா?"

அவன் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான். இந்த மாதிரி அழைப்பை அவன் எதிர்பார்க்கவே இல்லை.

"ஊஹும்; வேண்டாம். நீ சாப்பிடு."

"எனக்குப் பசியே இல்லை."

அவன் கலகலவென்று சிரித்தான். "ஏன் இப்படிப் பொய் சொல்றே? நீ சாப்பிடு. நீ சாப்பிட்டா நான் சாப்பிட்டாப்பிலெ."

"கொஞ்சூண்டு சாப்பிடு. வேண்டாம்னு சொல்லாதே. உன்னைப் பார்த்தா எனக்குப் பாவமா இருக்குது."

சுப்பி தன்னுடைய சட்டியில் இருந்த சாதத்தில் பெரும் பகுதியை அவனிடம் நீட்டினாள். அவனைக் கெஞ்சுகிற மாதிரி பார்த்தாள். அந்தப் பார்வையின் வேண்டுதலை மறுக்க அவனுக்கு முடியவில்லை. அதோடு வயிற்றுக்குள்ளே காலையி லிருந்து சிறு குடலைப் பெருங்குடல் விழுங்கத் தொடங்கி விட்டது.

சாப்பிட்டுக் கொண்டே அவன் பேசினான்.

"இந்தப் பொழைப்புக்கு என்னோட பழைய பொழைப் புத் தேவலாம்."

"அதென்னது?"

"திருட்டுப் பொழைப்பு."

"அப்படீன்னா நீ திருடனா?

"ஏன் நீ இப்படிப் பயந்து சாகிறே? திருடனும் மனுசன் தானே? உங்கிட்ட திருட்டுக் குடுக்க என்ன வச்சிருக்கே?"

அவளுடைய கண்களில் வெட்கம் கவிந்தது. அதை அவன் புரிந்துகொண்டான். ஏதோ சொல்லக்கூடாததைச் சொல்லிவிட்டது போல் உதட்டைக் கடித்துக்கொண்டான்.

நேரம் இருட்டிக்கொண்டு வந்தது. அவன் தன் கதை யைக் கூறினான். அவன் பெயர் முனியாண்டி. புதுக்கோட் டைச் சீமையிலிருந்து திருச்சிக்குப் பிழைக்க வந்தான். பிழைப்புக் கிடைக்கவில்லை. பட்டாளத்து ஆபீசுக்குப்

போய்ப் பார்த்தான். அங்கும் அவனைத் திருப்பி அனுப்பி விட்டார்கள். பாழும் வயிறு பஞ்சம் தெரியாமல் பசித்துக் கொண்டே இருந்தது. கடைசியில் திருடிவிட்டுச் சிறைக்குப் போனான்.

"ஆறு மாசத்துக்கப்புறம் வெளியே வந்திருக்கேன். ஆறு நாளாச்சு, திரும்பவும் பசிச்சுத் தொலைக்குது. ஜெயிலுக்குப் போனால் வேலையும் கிடைக்கும்; சோறும் கிடைக்கும்!"

"நீ ஒரு ஆம்பிள்ளையா? திருடிட்டு ஜெயிலுக்குப் போக வெக்கமில்லே?"

"நீ ஒரு பொம்பிள்ளையா? கை நீட்டிப் பிச்சை எடுக்க வெட்கமில்லே?"

இருவரும் ரோஷத்தோடு ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனர். கொஞ்சங் கொஞ்சமாய்க் கோபம் தணிந்து இரு முகங்களிலும் குளிர்ச்சி பரவியது. இருவரும் ஒன்றாக நீண்ட பெருமூச்சு விட்டார்கள்.

அது கல்யாண மாதம். எந்த எந்தத் தேதியில் எங்கெங்கே கல்யாணம் என்பது பெரும்பாலான பிச்சைக்காரர்களுக்கு மனப்பாடம். அந்த மாதிரி ஒரு நல்லநாளில் வேறெங்கோ கொட்டுமேளம் கேட்கும் வேளையில் இரண்டு பேரும் கல்யாணம் செய்துகொண்டார்கள். மஞ்சட் கயிற்றில் மஞ்சளை முடித்து மாலையிட்டான் முனியாண்டி. சுப்பி தன்னுடைய பாட்டி சொல்லியதையெல்லாம் அவனிடம் கூறினாள். கடைசி வரைக்கும் தன்னைக் கைவிடக் கூடாதென்று கேட்டுக் கொண்டாள். அவனும் தனக்குத் தெரிந்த சாமிகளின் பெயரையெல்லாம் சொல்லிச் சத்தியம் செய்தான்.

கல்யாணத்தன்று மாலை முனியனின் கையில் எப்படியோ இரண்டு வெள்ளி ரூபாய்கள் கலகலத்தன. சுப்பி அதிசயத்தோடு அவைகளைப் பார்த்தாள். அவளுக்கு அழுவதா சிரிப்பதா என்று தெரியவில்லை.

"எங்கேயாச்சம் திருடிட்டு வந்தயா?"

"சேச்சே! மார்க்கெட்டிலே இன்னிக்குக் கூலிக்கு ஏகப் பட்ட கிராக்கி. கல்யாண நாள் பாரு."

"ஒரே நாளிலே ரெண்டு ரூபாயா?"

"இன்னங் கொஞ்சங் கஷ்டப்பட்டா மூணுகூட கிடைக் கும். நான்தான் நாளியாகுதுன்னு வந்துட்டேன்."

அவளுக்கு அவன் பேச்சை நம்ப வேண்டியிருந்தது. உற் சாகத்துடன் காணப்பட்ட அவன் முகத்தைப் பெருமை யோடு பார்த்தாள்.

"இன்னிக்கு நம்ப ரெண்டு பேரும் ஓட்டல்லே சாப்பிடப் போறோம். வடை பாயாசத்தோட கல்யாண விருந்து."

"அங்கே நமக்கும் போடுவாங்களா?"

"காசில்ல பேசுது! காசு குடுத்தாக் கழுதைக்குக்கூட உபசாரம் நடக்கும்."

சுப்பி தன்னுடைய வாழ்வில் முதல் முதலாக இலை நிறையச் சோற்றைக் கண்டாள். வடை, பாயசம், அப்பளங்கள் இலையில் வந்து விழுந்தன. புருஷன் பக்கத்தில் உட்கார்ந்திருக்கும் கர்வத்தோடு, தன்னுடைய இறந்து போன பாட்டியையும் மனசில் நினைத்துக்கொண்டு மளமள வென்று சாப்பிட்டாள். இருவரும் சாப்பிடும்போதே அடிக்கடி ஒருவரை ஒருவர் கடைக் கண்ணால் பார்த்துச் சிரித்துக்கொண்டனர்.

பெட்டிக் கடையில் முனியாண்டி திண்டுக்கல் தளிர் வெற்றிலையும் மலைக்கோட்டைத் தூள் பாக்கும் வாங்கி வந்தான். சுப்பிக்கு ஒரு முழக் கதம்பம் வாங்க மறக்கவில்லை. இரவு பத்து மணிக்குமேல் இருவரும் மெதுவாகக் காவேரிக் கரைப் பக்கம் நடந்தார்கள் கீழச் சிந்தாமணிக் கரையில் ஆற்றை அடுத்துப் பழங்காலக் கருங்கல் மண்டபம் ஒன்று இருக்கிறது. ஆற்றின் புது வெள்ளம் இன்னும் முழுவதும் வடியவில்லை; அலைக்கரங்களால் இரு கரைகளையும் தொட்டுக் கொண்டு வெகு வேகமாய்க் காவேரி கடலை நோக்கித் தாவிக் கொண்டிருந்தாள். சுப்பியின் கரங்களும் மெதுவாக முனியனின் கரங்களைப் பற்றின.

# 3

ஆஸ்பத்திரிக் கட்டிலின் மெத்தை சுப்பியின் பச்சை உடம்புக்கு மிக மிருதுவாய்த் தோன்றியது. சாயங்காலமும் அவளுக்கு மருந்து கொடுத்தார்கள். குழந்தைக்குப் பாலூட்டினார்கள். குழந்தை அதிகமாய் அழவில்லை. மின்சார விளக்குகள் வரிசையாய் ஒரே சமயத்தில் குப்பென்று கண் திறந்தன. தூரத்தில் ஆஸ்பத்திரி ரேடியோ மெதுவாய்ப் பாடிக்கொண்டிருந்தது.

கல்யாணத்திற்குப் பிறகு நடந்த நிகழ்ச்சிகளைச் சுப்பி இப்போது நினைத்துப் பார்த்தாள். கண்களில் நீர் தேங்கிக் கீழே வழியத் தொடங்கியது! ஒரே ஒருநாள் இன்பத்திற்குப் பிறகு இத்தனை துன்பமா? இத்தனை கொடுமையா?

மறுநாள் காலையில் ஆற்றங்கரைக்குக் காக்கைக் கூட்டம் முனியனையும் சுப்பியையும் கிழக்கு வெளுக்குமுன்பே எழுப்பி விட்டது. முன்னிரவில் முனியன் சூட்டிவிட்ட கதம்பத்தில் ஒரு பூக்கூட இப்போது சுப்பியின் தலையில் இல்லை. இதழ் இதழாக மலர்கள் கீழே மண்டபத்தில் உதிர்ந்து வாடிக் கிடந்தன. ஆனால் மணம் மட்டிலும் மனத்தை மயக்கியது.

இருவரும் ஆற்றின் குளிர்ந்த நீரில் முழுகி எழுந் தார்கள். மாற்றிக்கொள்வதற்கு வேறு கந்தல்கள் தயாராக இருந்தன. ஆப்பக்கார பாட்டியிடம் இரண்டணுவுக்கு ஆப்பம் வாங்கி இருவரும் சாப்பிட்டார்கள்.

"போயிட்டு மத்தியான்னம் ரெண்டு மணிக்குள்ளே வந்திடறேன் சுப்பி. இங்கேயே பத்திரமாயிரு."

"சுருக்கா வந்திடு."

இரண்டு மணியாகியது. மூன்று மணியாகியது; நான்கு மணியாகியது. சுப்பியின் நெஞ்சுக்குள்ளே வண்டு குடைவதைப் போன்ற ஓர் வேதனை. அந்தக் குடைச்சல் நாழிகை ஆக ஆகப் பொறுக்கவே முடியவில்லை. வழியில் போகும் ஆண்பிள்ளை ஒவ்வொருவனையும் பார்த்து, அவன் முனியனாக இல்லாததைக் கண்டு ஏமாந்தாள்.

இந்தச் சமயத்தில்தான் அவள் பாட்டிக்கும் அவளுக்கும் பழக்கமான நொண்டிக் கிழவி அங்கு வந்து சேர்ந்தாள். அவளிடம் சுப்பி எதையும் மறைக்கவில்லை.

"அடி, பாவி! ஆம்பிளைப் பயலை நம்பலாமோ?"

"வேறே என்ன பாட்டி செய்யறது? யாரைத்தான் நம்பச் சொல்றே?"

கிழவிக்கு வாயடைத்துவிட்டது. என்ன பதில் சொல்வதென்று அவளுக்குத் தெரியவில்லை.

சாயங்காலம் முனியனைத் தேடிக் கடைவீதியின் மூலை முடுக்கெல்லாம் சுப்பி அலைந்தாள். அழுகையும் ஆத்திரமும் பீரிட்டுக்கொண்டு வந்தன. பாட்டி செத்துப்போன போது கூட அவள் இத்தனை கஷ்டத்தை அநுபவிக்கவில்லை.

"சுப்பி!"

சுப்பி திரும்பிப் பாத்தாள். இரண்டு போலீஸ்காரர்களுக்கு மத்தியில் முனியன் விலங்கும் கையுமாய் நடந்து வந்தான்.

"ஆறு மாசம் போடுவாங்க. பத்திரமாயிரு. திரும்பி வந்திடறேன்."

சுப்பியின் உதடுகள் துடித்தன. பேச்சு வெளிவரவில்லை.

"அழுவாதே சுப்பி; இது என்னோட கடைசித் திருட்டு."

அவனுக்கு ஆறுமாதம் போடவில்லை; ஒரு வருஷம் போட்டார்கள். அவன் கோர்ட்டில் கெஞ்சிய கெஞ்சலெல்லாம் வீணாயிற்று.

சுப்பி ஆறு மாதங்கள் கழித்து அவனை ஒருமுறை சிறையில் போய்ப் பார்க்க முடிந்தது. காலணாக் காசுகளாகச் சேர்த்து ஒருவரிடம் கொடுத்து மனு எழுதிப் போடச் சொன்னாள். சிறைக்குள் அவர்கள் இருவரும் சந்தித்தபோது சுப்பிக்கு ஆறு மாதம். முனியனைப் பார்க்கப் பகீரென்றது அவளுக்கு. எலும்புக் கூட்டுக்குச் சட்டையும் கால்சராயும் மாட்டிய மாதிரி உருமாறிப் போயிருந்தான்.

"உன்னைப் பார்த்திருக்காட்டி ஆயுசு பூராவும் இங்கேயே இருந்திடுவேன். வேலைக்கும் சோற்றுக்கும் இங்கே பஞ்சமில்லை—சுப்பி! ஒருநாள் போறது ஒரு யுகமா இருக்கு."

தனக்குக் குழந்தை பிறக்கப் போவது முனியாண்டிக்கு ஒருவிதத்தில் வருத்தமாகவும் இன்னொரு விதத்தில் மகிழ்ச்சியாகவும் இருந்தது. அவளைப் பத்திரமாக இருக்கச் சொல்லி ஆயிரந்தடவைகள் நினைவூட்டிவிட்டான். சிறைக் கதவு திறந்தவுடன் நேரே ஆற்றங்கரைக் கல்மண்டபத்துக்கு வந்து விடுவானும்.

சுப்பி பிள்ளைத்தாய்ச்சியாயிருந்துகொண்டு அந்தக் கூட்டத்தினருக்கு மத்தியில் பட்டபாடு கொஞ்ச நஞ்சமல்ல. பட்டினியைப் பொறுத்தாள்; பொறுத்துப் பழகியவள். பரிகாசத்தைப் பொறுக்க முடியவில்லை. சாடைமாடையாகவும் நேரிடையாகவும் அவளைப் பலர் சொல்லால் துளைத்தார்கள்

ஆஸ்பத்திரியில் மூன்று நாட்களுக்குமேல் சுப்பியை வைத்திருக்கவில்லை. குழந்தையை மார்பில் அணைத்துக் கொண்டு அடிமேல் அடிவைத்து வெளியே வந்தாள். இன்னும் இரண்டு நாளாவது அங்கே இருந்தால் தேவலாமென்ற ஆசை. இரண்டு நாளென்ன? இரண்டு வருஷங்கூட இருக்க ஆசைதான்.

"இது தர்ம சத்திரமில்லே; தர்ம ஆஸ்பத்திரி" என்று நினைவூட்டினுள் ஒரு நர்ஸ்.

குழந்தை தாயின் மார்பகத்தோடு ஒன்ருய் ஒட்டிக்கொண்டு முண்டியது. இறுக அணைத்துக்கொண்டு ஆஸ்பத்திரியின் பெரிய காம்பவுண்டுக்கு வெளியே வந்தாள். நொண்டிக் கிழவியைக் கண்டுபிடிக்க அவளுக்கு அதிக நேரம் ஆகவில்லை. திரும்பவும் அவர்களுக்குத் தென்னூர் பட்டாபி ராமப்பிள்ளை தெருவே புகலிடம் அளித்தது. காலியாய்க் கிடந்த ஓர் ஓட்டு வீட்டின் ஓட்டுத் திண்ணையில் அவர்கள் குடி புகுந்தார்கள்.

தெருப் பெண்களின் உதவி குழந்தையைக் கண்ட புதிதில் கொஞ்சம் தாராளமாய்க் கிடைத்தது. சிலர் பால் வார்த்தார்கள். சிலர் சுப்பிக்கும் பழையது போட்டார்கள். தாயின் வயிறு நிறைந்தால்தான் குழந்தைக்குத் தாய்ப்பால் கிடைக்கும் என்ற தத்துவம், குழந்தை பெற்ற பெண்களுக்குப் புதிதல்லவே!

பத்து நாட்கள் சென்றன. அன்போடு கஞ்சி ஊற்றியவர்கள் அதட்டித் திருப்பினார்கள். பரிவு காட்டியவர்களின் மனம் பாலைவனமாகி வந்தது.

"குழந்தையோட முகத்தைக் கொஞ்சம் பாரம்மா!"

"ஒவ்வொரு விட்டிலேயுந்தான் ஒன்பது குழந்தை இருக்கு."

சுப்பி இளைத்துத் துரும்பாகி வந்தாள். குழந்தையும் இளைந்து எலும்புக் கூடாகியது. ஒரு சொட்டுப் பால் குழந்தையின் வறண்ட தொண்டையை நனைக்க அவளிடம் இல்லை. சொரியும் கண்ணீரைக் குழந்தை குடித்துப் பசியாற முடியுமா?

"அட சண்டாளப் பயலே! ஏண்டா இப்படிக் கத்தறே?" என்பாள் இடைவிடாமல் கத்தும் பையனைப் பார்த்து. அதற்காக அவன் ஒன்றும் அழுவதை நிறுத்துவதில்லை. பகல் முழுவதும் அவன் அழுதான். இரவு முழுவதும் அழுதான்.

ஒரு நாள் இரவு அவன் அழுகை உச்ச நிலைக்கு வந்தது. சுப்பி அவனருகில் உட்கார்ந்து கண் கொட்டாமல் அவனைக் கவனித்தாள். கைகளையும் கால்களையும் அவன் தேள் கொட்டிய மாதிரி உதைத்துக் கொண்டான். வாய் இரண்டாகக் கிழிந்து விடுவதுபோல் வளைந்தது. வீல் வீலென்று அந்தத் தெருவெல்லாம் கேட்கும்படி கத்தினான். திறந்த வாயை மூடவில்லை.

நடுச்சாமம் ஆகியது. கைகால்களில் ஆட்டம் சிறிது சிறிதாகக் குறைந்தது. வெறும் அழுகைதான். பிறகு அந்த அழுகையின் குரலும் சன்னமாகிக் கொண்டே வந்து தேம்பலில் நின்றது. கால்மணி நேரம் விட்டு விட்டுத் தேம்பினான். தேம்பல் தேய்ந்து பெருமூச்சு வாங்கியது. பிறகு கைகளும் கால்களும் கடைசி முறையாக ஒரு வெட்டு வெட்டி நின்றன.

அதற்குப் பிறகு அந்த இரண்டு மாதக் குழந்தை அழவே இல்லை. அதைப் பெற்றவளின் ஒப்பாரி மாத்திரம் அந்த இருளைக் கிழித்துக்கொண்டு ஒற்றைக் குரலாய் ஊரெல்லாம் பரவியது.

பொழுது விடிந்தது. நொண்டிக் கிழவி தனக்குத் தெரிந்த வார்த்தையெல்லாம் சொல்லி அவளைச் சமாதானப் படுத்தினாள். அந்தத் தெருப் பெண்களிடையே மெல்ல மெல்லக் குழந்தை இறந்த செய்தி புறப்பட்டது. அவர்கள் மீண்டும் திடீரென்று, அன்றொரு நாள் குழந்தை பிறந்த அன்று மாதிரி, அவளிடம் கருணை காட்டத் தலைப் பட்டார்கள். அவளுடைய சட்டியில் அவள் விரும்பாமலே சோறும் கறியும் நிரம்பின.

சுப்பி தன் சட்டியைத் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை. கிழவியிடம் தள்ளி வைத்தாள். கிழவிக்கும் அப்போது அதைச் சாப்பிட மனம் ஒப்பவில்லை. ஒரு புறமாய்த் தள்ளி வைத்தாள்.

பகல் பத்து மணிக்கெல்லாம் குழந்தையைத் தூக்கிக் கொண்டு சுப்பியும் அந்தக் கிழவியும் உய்யக்கொண்டான் ஆற்றங்கரைப் பக்கம் நடந்தார்கள். அந்தப் பகுதியில் சாகிற பெரிய பெரிய பிரபுக்கள் வீட்டுக் குழந்தைகளைக்கூட அந்தக் கரையில்தான் அடக்கம் செய்வது வழக்கம். கையிலிருந்த சில்லறையை வெட்டியானிடம் கொடுத்துக் குழி தோண்டச் செய்தார்கள். எல்லாக் காரியங்களும் முடிந்து குழந்தை மண்ணோடு மண்ணாயிற்று.

கிழவி திரும்பி வந்து சட்டியில் இருந்த சோற்றைச் சாப்பிட்டாள். சுப்பிக்கு வயிறு பசியால் பற்றிக்கொண்டு எரிந்தது. பேசாமல் தனியாகச் சிந்தாமணிக் காவேரிக் கரைக்கு வந்தாள். ஆற்றில் குளித்து முழுகிவிட்டு நாலு வாய்த் தண்ணீரை அள்ளிக் குடித்தாள். மயக்கமாக வந்தது. அந்தக் கல்மண்டபம் சுற்றிச் சுழல்வது போலிருந்தது. அங்கேயே ஒரு வருஷத்திற்கு முன்பு அவனும் தானும் படுத்திருந்த அதே இடத்தில், தனியாக முடக்கிக்கொண்டு படுத்தாள். எத்தனை நாழிகை ஆயிற்றோ தெரியாது.

"சுப்பி!"

மங்கியிருந்த கண்களில் அவளுக்கு திடீரென்று ஒளி பிறந்தது. ஏறிட்டுப் பார்த்தாள். மாலை மாலையாய்க் கண்ணீர் பெருக அப்படியே அருகில் வந்து உட்கார்ந்திருந்த

முனியனைக் கட்டிக் கொண்டாள். தேம்பித் தேம்பி அழுது அவன் தேகமெல்லாம் கண்ணீராக்கினாள்.

"உன்னோட மகனை இப்பத்தான் வாரிக் கொண்டு போட்டுட்டு வர்றேன்."

சூரியன் மெதுவாகக் கீழே இறங்கிக் கொண்டிருந்தான். இருவரும் அதிகமாகப் பேசிக் கொள்ளவில்லை. ஒருவருடைய முகத்தில் ஒருவர் எதைத்தான் அப்படிக் கண்டார்களோ, நெடுநேரம் பார்த்துக்கொண்டார்கள். வாயால் சொல்ல முடியாத கதைகளையெல்லாம் கண்கள் சொல்லிக் கொண்டன.

"கவலைப்படாதே! பசிக்களைப்பு உனக்கு. ஜெயில்லே குடுத்த காசு ரெண்டு ரூபாய் பத்திரமா இருக்கு. வா, ஓட்டலுக்குப் போய்ப் பசியாறச் சாப்பிடலாம். உம், எழுந்திரு!"

"இன்னமே நீ திருடமாட்டியே?"

"நான் திருடவும் இல்லே; நீ பிச்சை எடுக்கவும் வேண்டாம். பிழைச்சா மானமாப் பிழைப்போம், இல்லாட்டி ரெண்டு பேருக்கும் ஒண்ணுக் காவேரி இருக்கவே இருக்கு."

அன்றைக்கு இரவு சுப்பி தன் வாழ்வில் மூன்றாவது வேளையாக முனியாண்டியுடன் வயிறு நிறையச் சாப்பிட்டாள்.



# வெறி

எழுத்தாளர் அம்பலவாணனின் எண்ணங்கள் சூடேறிக் கொண்டிருந்தன—இரண்டு மூன்று நாட்களாக நெஞ்சுக் குள்ளே கிடந்து அலைமோதிக் கொண்டிருந்த கற்பனை ஒன்றைக் கதையாக்குவதற்காக ஏற்பாடுகள் செய்து கொண்டிருந்தார். காலை நேரம், காபி, தனிமை இந்த மூன்றும் அவர் கதை எழுதுவதற்குத் தேவையானவை. நெஞ்சுக்குள்ளே கற்பனை துடித்துக் கொண்டிருந்ததால், நாலரை மணிக்கே அவருக்குத் தூக்கம் கலைந்துவிட்டது. ஐந்து மணி வரை படுக்கையிலேயே கிடந்து நினைவுகளைப் புரட்டிக் கொண்டிருந்தார். பின்பு எழுந்து விளக்கைப் போட்டபோது அவருடைய மனைவி புவனுவும் கூடவே எழுந்துவிட்டாள். தொட்டிலில் படுத்திருந்த கைக் குழந்தை வெளிச்சம் தாங்காமல் முகத்தைச் சுளித்துக் கொண்டு திரும்பிப் படுத்தது. இரண்டாவது பையன் ராஜா படுக்கையிலிருந்து உருண்டுபோய் வெறுந்தரையில் சுவரோடு சுவராய் ஒட்டிக் கொண்டிருந்தான். முதல் பெண் பாரதி ஏதோ கனவு கண்டு தூக்கத்தில் உளறினாள்.

அம்மாவும் அப்பாவும் குழந்தைகளுக்குப் பயந்து கொண்டு சந்தடி செய்யாமல் அறைக்கு வெளியே வந்தார்கள். எழுத்தாளர் தெருப்பக்கம் வந்து வழக்கம் போல் நடக்கத் தொடங்கினார். கால் மணி நேரத்தில் அவர் திரும்பி வருவதற்குள் சுடச்சுடக் காபி இருக்க வேண்டும்.

அம்பலவாணன் தம்முடைய கற்பனைகளோடு உலவி விட்டுத் திரும்பிவந்தபோது, வீட்டில் கூச்சலும் குழப்பமுமா யிருந்தது. தொட்டிற்குழந்தை பத்து வீடுகளுக்கப்பால் அவர் வரும்போதே தன்னுடைய பள்ளிஎழுச்சியைத் தெரிவித்தது.

மூத்த பெண் அப்போதுதான் கடைக் குட்டியின் சத்தம் தாங்க முடியாமல் படுக்கையிலிருந்து சிணுங்கிக் கொண்டே எழுந்து வெளியே வந்தாள். சமையலறையில் அடுப்புக்கு முன்னால் உட்கார்ந்திருந்த புவனாவின் கழுத்தைக் கட்டிக் கொண்டு அவள் முதுகின்மேல் சவாரி செய்தான் ராஜா.

வழக்கத்திற்கு முன்பே சீக்கிரமாய் அவர் திரும்பியதைக் கண்டு புவனா பரக்கப் பரக்க வேலைகளைக் கவனித்தாள். படுக்கையறை பத்தே விநாடிகளில் எழுத்தறையாக மாறிற்று. படுக்கைகளை ஒழுங்கு செய்து, தொட்டிற் குழந்தையைத் தூக்கி, அறையைக் கூட்டிச் சுத்தமாக வைத்தாள். பழைய காலத்து ராஜா சிம்மாசனத்தில் அமர்ந்து கம்பீரமாக மந்திரி பிரதானிகளைச் சுற்றிப் பார்ப்பதுபோல் எழுத்தாளர் நாற்காலியில் வந்து உட்கார்ந்து அறைக்குள்ளே கண்ணோட்டத்தை விட்டார். புத்தக அலமாரி, பத்திரிகைக் குவியல் காகிதக் கற்றை, கடிதக்கட்டு எல்லாம் அதனதனிடத்தில் ஒழுங்காயிருந்தன. எழுத்தாளருக்கு அவைகளைக் கலைத்துப் போடும் வேலை; அவர் மனைவிக்கு அவைகளை ஒழுங்குபடுத்தும் வேலை. எந்த வேலைகளுக்கு அந்த வீட்டில் குறைவிருந்தாலும் இந்த வேலைகளுக்கு மட்டிலும் குறைவே இல்லை.

புகையப் புகையப் புது மணத்தோடு காபி மேஜைக்கு வந்தது. கொண்டுவந்து வைத்துவிட்டுப் பேசாமல் குழந்தைகளை அழைத்துக்கொண்டு வெளியே போனாள் புவனா. எழுத்தாளர் எழுந்து போய் அறையை உட்பக்கமாகத் தாழிட்டுக் கொண்டார். யோசனையோடு அறைக்குள்ளாகக் குறுக்கும் நெடுக்கும் நடந்தார். அவருடைய கற்பனை உருவாவதற்கு வேண்டிய வசதிகள் கிடைத்துவிட்டன. தாழிடப் பட்ட அந்த அறைக்குள்ளே அவர், வானத்தில் சிறகடித்துப் பறக்கும் கட்டற்ற பறவையின் ஆனந்தத்தை உணர்ந்தார்.

எழுதுவதற்காக அவர் நாற்காலியில் திரும்பவும் வந்து உட்கார்ந்தபோது, அறைக்கு வெளியே புவனாவின் குரல் கேட்டது.

"வேண்டாண்டா, ராஜா! அங்கே போகாதே; அப்பா எழுதுறுங்க."

ராஜாவின் சின்னஞ்சிறு காலடி ஓசை கேட்டது. தொடர்ந்து புவனுவின் ஓசையும் கேட்டது. ஓடிவந்து அவனை அழைத்துக்கொண்டு திரும்பினுள். ஒரு கணம் ராஜாவின் அழுகுரல் எழுந்து, பிறகு மறுகணமே ஓய்ந்துவிட்டது.

"எழுதும்போது அப்பாவுக்குக் கோபம் வரும். யாரும் அங்கே போகக் கூடாது. தெரியுமா?"

"ஆமாண்டா, ராஜா! அப்பா அடிப்பாங்க" என்று தன் தயாருக்குப் பின்பாட்டுப் பாடினுள் பாரதி.

குழந்தைகளைக் கவனித்துக் கொள்வதற்குப் புவனுவும் பல உபாயங்களைக் கற்றுவைத்திருந்தாள். கைக்குழந்தையை மார்பகத்தில் அடங்க வைப்பாள். ராஜாவுக்குத் தின்பண்டங்கள் கொடுப்பாள். பாரதிக்கு விளையாட்டுப் பொம்மைகள் இருத்தன. என்றுலும் எழுத்தாளரின் குழந்தைகள், தாயார் தங்களை அழாமல் செய்வதற்கு எத்தனை வழிகளைக் கண்டு பிடித்திருந்தாளோ அதைவிடச் சில வழிகள் அதிகமாகவே அடம் பிடிப்பதற்குக் கண்டு பிடித்திருந்தன!

காபியை ஒரு வாய் குடித்துவிட்டுக் கதையின் தலைப்பை எழுதினுர். பிறகு முதல் வரியில் பாதிப் பகுதி எழுத்துக்கள் ஓடின. திடீரென அறைக்கதவில் இடி இடித்ததுபோல சத்தம் கேட்கவே அவருக்குத் தாங்க முடியவில்லை. கோபத்தோடு பேனுவை மேஜை மேல் அப்படியே வைத்தார். மேலும் சில இடிகள் தொடர்ந்து இடித்தன.

"அம்மா, அம்மா! ராஜா விறகுக் கட்டையாலே கதவை இடிக்கிறுனம்மா!"

அவர் படீரென்று போய்க் கதவைத் திறப்பதற்கும் புவனு பையனை வந்து தூக்கிக் கொண்டு போவதற்கும் சரியாக இருந்தது.

"நல்லாயிருக்கு குழந்தைகளைப் பார்த்துக்கொள்கிற லட்சணம்!" அவள் ஒன்றும் பதில் பேசவில்லை; வேகமாய்ப் போய்விட்டாள்.

"நீங்கள் போய் எழுதுங்கப்பா. நான் ராஜாவைப் பார்த்துக்கறேன், அவன்தான் குறும்புக்காரப் பயல். இந்தப் பக்கம் அவன் வந்தால் நான் சொல்றேனப்பா!" என்றாள் குழந்தை பாரதி.

கதவை மீண்டும் தாழிட்டுக் கொண்டு தம்முடைய மெல்லிய கற்பனை நூலேணியில் மெதுவாக ஏறினார். சற்று முன்பு ஏற்பட்ட சிறு சலனத்தால் அந்த நூலேணி இன்னும் அவர் மனதிற்குள்ளே நடுங்கிக் கொண்டிருந்தது. ஐந்து நிமிஷம் ஆனபிறகுதான் அடுத்த வரியைத் தொடர்ந்து எழுதினார். பத்து மணி ஆவதற்குள் சிறுகதையில் கால் பகுதி யாவது முடித்துவிட வேண்டுமென்பது அவர் ஆவல். அதன் பிறகு அவர் தம்முடைய ஆபீசில் சரியாகப் பத்தரைமணிக்கு இருக்க வேண்டும். ஏதோ ஒரு வெள்ளைக்காரக் கம்பெனியில் குமாஸ்தா வேலை.

இலக்கியம் அவருக்குத் தொழிலுமல்ல; உபதொழிலு மல்ல. ஆனால், தம்மையும் தம்குடும்பத்தையும் காப்பாற்றிய அந்தக் குமாஸ்தா வேலையைவிட அவர் ஆயிரம்மடங்கு எழுத்தைப் பெரிதாக மதித்தார். இலக்கியப் பைத்தியம் என்று சொல்லுகிறார்களே அந்த ரகம். எப்போதும் அதே நினைவு, அதே பேச்சு, அதே செயல். ஆனால் ஏனோ அவரால் அதிக மாய் எழுதிக் குவிக்க முடியவில்லை.

கதையைத் தொடர்ந்து நாலுவரிகள் எழுதினார். பின்பு நிறுத்திவிட்டு யோசனை செய்தார். பேனாவைக் கையில் எடுத்தால் மளமளவென்று எழுதிக்கொண்டு போகிற பழக்கம் அவரிடம் இல்லை. அடிக்கடி யோசனை செய்வதி லேயே பெரும் பொழுது தீர்ந்துவிடும்.

கதவை லேசாகத் தட்டும் சத்தம் கேட்டது.

"இந்தாங்க!"

"என்ன அது?"

"யாரோ உங்களைத்தேடி வந்திருக்காங்க. இல்லை என்று சொல்லி விடட்டுமா?"

சற்று நிதானித்துவிட்டுப் போய்க் கதவைத் திறந்தார். யாராவது முக்கியமானவராக இருந்துவிடப் போகிறாரே என்ற தயக்கம். "சரி, போய் உள்ளே வரச்சொல்."

## 2

வந்தவர் அடுத்த தெரு அப்பாத்துரை. வயது நாற்பதிருக்கும். நல்ல வசதியான நிலைமையில் உள்ளவர். செலவாளியும் கூட. ஒவ்வொரு சினிமாவுக்கும் தவறாமல் தம்முடைய குடும்பத்தோடு போய்ப் பார்த்து வருவார். உயர்ந்த ரகத் துணி, வாசனைத் திரவியம், கலை நிகழ்ச்சிகள் என்று சொல்லப்படுகிற களியாட்டங்கள் இவற்றுக்கெல்லாம் குறைவில்லை. அப்பாத்துரைக்கும், அம்பலவாணனுக்கும் அதிகப் பழக்கமில்லை. கொஞ்சம் தெரிந்தவர்.

"ஏது இவ்வளவு தூரம் அபூர்வமாயிருக்கிறீர்கள்?"

"உங்களைப் பார்க்கத்தான் வந்தேன். உங்கள் புத்தகமென்றால் எங்கள் வீட்டில் எல்லோருக்கும் அலாதிப் பிரியம். என்னுடைய அகத்துக்காரி, பெண்கள், பையன் எல்லோரும் உயிரை வாங்குகிறார்கள். அதனால்தான் வந்தேன்."

இத்தனை பெரிய மனிதர், வசதியுள்ள பிரமுகர். இரவல் புத்தகம் வாங்குவதற்கு இவ்வளவு தூரம் வந்திருக்கிறாரே என்று வியப்போடு பார்த்தார் கதாசிரியர். அவரிடம் வழக்கமாக அவர் எழுதிய புத்தகங்கள் கைவசம் இருப்பதில்லை. பதிப்பகத்தார் கொடுக்கும் ஐந்தாறு பிரதிகளையும் நெருங்கிய நண்பர்களுக்கும் வேண்டிய எழுத்தாளர்களுக்கும் கொடுத்து விடுவார். பல சமயங்களில் தம்முடைய புத்தகங்களையே அவர் கடைகளில் விலை கொடுத்து வாங்க வேண்டிய நெருக்கடி ஏற்பட்டதுண்டு.

எழுத்தாளர் சிரித்தார். "வசதியுள்ள வாசகர்களுக்குப் புத்தகம் வாங்கிப் படிக்க மனம் இல்லை. வாங்கிப் படிக்க

ஆசைப்படுகிறவர்களிடம் கையில் காசில்லை. அதனால்தான் எழுத்தாளன் குமாஸ்தா வேலை பார்க்க வேண்டியிருக்கிறது. உங்களைப் போல் இருப்பவர்கள் ஊருக்கு ஒரு வாசகசாலை வைத்துப் புத்தகம் வாங்கினால்கூடப் போதுமே!''

இலவசப் புத்தகத்திற்குப் பதிலாக அவருக்கு இலவச யோசனை கிடைத்தது. எழுத்தாளர் இவ்வளவு இரக்கமில்லாமல் பேசுவார் என்று அவர் எதிர்பார்க்கவில்லை. ஆனால் எழுத்திலும் பேச்சிலுந்தான் எழுத்தாளர் கண்டிப்பாக இருந்தாரே தவிர, நேரில் அப்படியில்லை. அவர் மனம் இயல்பாக இளகக்கூடியது. தாமே எழுந்து போய் புத்தக அலமாரியைக் கலைத்துப் போட்டு அங்கிருந்த இரண்டே இரண்டு புத்தகங்களை எடுத்துக் கொடுத்தனுப்பினார்.

அவர் போனபின்பும் இவருக்கு ஆத்திரம் தீரவில்லை. ''ஹாலிவுட் நடிகைகளின் ஆடையில்லாத ஆட்டத்திற்கு ஐந்து ரூபாய் கொடுக்கலாம். இலக்கியம் மட்டிலும் இரவலாய்க் கிடைக்கவேண்டும்! இந்த மாதிரி மனப்பான்மை உள்ளவர்களிடம் எங்கே இலக்கியம் உருப்படப் போகிறது?''

தம்முடைய மனநிலையை ஒருமுகப்படுத்தித் திரும்பவும் எழுதுவதில் முனைந்தார் அம்பலவாணன். எழுத்தில் வேகம் அதிகரித்துத் தடங்கலின்றிப் போய்க் கொண்டிருந்தது. ஒரு பக்கத்தை முடித்து அடுத்த பக்கத்திற்கு வந்தார். அப்போது வீடே அதிர்ந்து போவது போல் கைக்குழந்தை வீரிட்டழும் சத்தம் கேட்டது. இடைவிடாமல் குழந்தை அடித்தொண்டையில் கத்தியது. யாரும் அழுகையை அடக்கக் காணோம். ''புவனா எங்கே தொலைந்து போனாள்?'' என்று முணுமுணுத்தார்.

அழுகை அதிகமாகியது. கோபத்தின் படபடப்போடு எழுத்தாளர் எழுந்து வெளியே வந்தார். முதல்பெண் பாரதி அவருடைய அறைப் பக்கம் வந்து கொண்டிருந்தாள்.

''ராஜா வந்து பாப்பாவைக் கடிச்சுட்டான்'பா.''

பளீர் என்று ராஜாவின் கன்னத்தில் ஓர் அறை விழுந்தது. எப்போதும் அவர் குழந்தைகளை அடிப்பதில்லை. தம்மை

மீறிய கோபம் வந்தால் மட்டிலுமே, முதலில் அடித்து விட்டுப் பின்பு வருந்துவார்.

ஒரு அழு குரலோடு இன்னொரு குரலும் சேர்ந்தது. ராஜா தன்மூச்சைப் பிடித்துக் கொண்டு அழ ஆரம்பித்தான். அவருக்குக் கோபம் அதிகமாயிற்றே தவிரக் குறையவில்லை.

புவனு அப்போதுதான் கொல்லைப் புறத்திலிருந்து குளித்துவிட்டு அங்கே வந்தாள். ராஜாவின் கன்னத்தில் விழுந்த அறையை அவள் கவனித்துவிட்டாள். தாயுள்ளம் அதைத் தாங்கவில்லை.

பாரதி தாயாரிடம் புகார் செய்தாள்:

"அம்மா! பாப்பாவுக்கு முத்தங் கொடுக்கிறேன்னு சொல்லி ராஜா மூக்கைக் கடுச்சுட்டான்'மா."

"அப்பா அடிச்சும்மா!" என்று அழுதுகொண்டே போய்த் தாயின் காலை ராஜா கட்டிக்கொண்டான். அழுகை இரண்டு மடங்காகியது.

"ஒரு நிமிஷம்கூட இந்த வீட்டில் நிம்மதி இல்லை. எங்கே யாவது காட்டுக்குப் போனால்தான் நான் எழுத முடியும். கொஞ்சநேரம் குழந்தைகளைப் பார்த்துக்கொள்ள வழி யில்லாத வீடு என்ன வீடு?"

"உங்களுக்கெல்லாம் வீடு வாசல் எதற்கு? கல்யாணமே செய்து கொண்டிருக்க வேண்டாமே!"

"தப்புத்தான்! முதல் தப்பு கல்யாணம்; இரண்டாவது தப்பு, குழந்தைகள்! மூன்றாவது தப்பு இன்னும் இந்த எழுத்தைக் கட்டிக்கொண்டு திண்டாடுவது."

"இத்தனை வருஷமாய் எழுதி என்னத்தைக் கண்டு விட்டீர்கள்? ஏன் இந்தப் பைத்தியம் உங்களுக்கு?"

எழுத்தாளர் வெறித்துப் பார்த்தார்.

இதுநாள் வரையில் புவனு இப்படிப் பேசியதே இல்லை. ராஜாவின் கன்னத்தில் ஏற்பட்ட சிவப்பு அவளுக்குக் கோப மூட்டியிருக்க வேண்டும். இதற்கு முன்பு இரு நாட்களாக

அவர் கதையிலேயே முழுகிப் போயிருந்ததால், அவளோடு அதிகமாகப் பேசவே இல்லை. அந்தக் கோபம் வேறு.

கற்பனை உள்ளம் துடி துடித்தது. புவனாவா இப்படிப் பேசுகிறாள்? 'இத்தனை வருஷமாய் எழுதி என்ன பலனைக் கண்டுவிட்டீர்கள்? ஏன் இந்தப் பைத்தியம் உங்களுக்கு?......'

எதிர்பாராத இந்தச் சொற்கள் அவர் இதயத்தைச் சுட்டுப் பொசுக்கின. உதட்டைக் கடித்துக்கொண்டு மௌனமாகத் தம் அறைக்கு வந்தார். அடக்கப்பட்ட ஆத்திரத்தால் அவர் தேகமே நடுங்கியது. கைகளைப் பின்புறம் கட்டிக் கொண்டு அறையில் குறுக்கும் நெடுக்கும் நடந்தார்.

புவனா மற்ற சில பெண்களைப் போன்றவளல்ல. நன்றாகப் படித்தவள். இலக்கிய ரசனை அதிகம் உண்டு. கல்யாணத்திற்கு முன்பே அவருடைய கதைகளை விடாமல் படித்து அவரது உள்ளத்தைத் தெரிந்துகொண்டாள். பட்டுப் புடவைக்காகவும், வைர மூக்குத்திக்காகவும் அவள் அவரிடம் பிணங்கியதில்லை. இலக்கியகர்த்தாவின் மனைவி என்ற பெருமை மாத்திரம் ஓரளவு அவளிடம் உண்டு,—அவளா இன்று இப்படிப் பேசிவிட்டாள்?

வீட்டில் அடுத்த நிமிஷத்திலிருந்து அமைதி நிலவியது அம்பலவாணன் அவசர அவசரமாய் மாற்றுடை உடுத்துக் கொண்டு வெளியே கிளம்ப முயன்றார். ஆரம்பித்த கதை மேஜையில் அப்படியே கிடந்தது. ஆபீஸ் புறப்பட ஒரு மணி நேரம் இருந்தது என்றாலும் முன்பே அவர் அங்கே போய் விடப் பார்த்தார். வீட்டில் இருப்புக் கொள்ளவில்லை. அறையைவிட்டு வெளியே வந்தார்.

"இதற்குள் எங்கே புறப்படறீங்க?"

அவர் பதிலளிக்கவில்லை.

புவனா பரக்கப் பரக்க அவர் பின்னால் ஓடிவந்தாள்.

"இந்தாங்க; இங்கே பாருங்கள்!"

அவர் திரும்பவில்லை.

"சாப்பிட்டுப் போயிடுங்க; எல்லாம் தயாராக இருக்கு. நான் சொன்னது தப்புத்தான். கோவிச்சுக்காதீங்க."

"..........."

கதவைத் திறக்கப் போகும் சமயம் புவனு வந்து குறுக்கே நின்றுள். அம்பலவாணன் அவள் முகத்தை ஏறிட்டுப் பார்க்கவில்லே. மெதுவாகக் கரத்தைப் பற்றப் போனுள். உதறிவிட்டு வேகமாய்க் கதவைத் திறந்து வெளியே நடந்தார்.

புவனுவுக்கு ஓடோடியும் போய் அவரை நிறுத்த வேண்டும் போலிருந்தது. அதற்குள் அவர் தெருவில் இறங்கி விட்டார். கண்ணீர் வெடித்துக்கொண்டு வந்தது அவளுக்கு. தேம்பித் தேம்பி அழுதாள். அவருடைய அறைக்குள்ளே வந்து பார்த்தபோது எல்லாம் அப்படி அப்படியே கிடந்தன.

## 3

'இத்தனே நாளாய் எழுதி என்ன பலன்?...'

எந்தப் பலனேயும் நினேத்து அவர் ஆரம்பத்தில் பேனுவைக் கையில் எடுக்கவில்லே. லாப நஷ்டக் கணக்குப் பார்க்கும் கடைச் சரக்காக மதித்திருந்தால் அவர் இத்தனே காலமும் தொடர்ந்து எழுத்தில் ஈடுபட்டிருக்க மாட்டார். என்ருலும் புவனு எழுப்பிய கேள்விக்கு அவர் சமாதானம் கூற வேண்டியிருந்தது. மனேவியின் கேள்வியில் உண்மை இல்லாமல் இல்லே. அதை எப்படி மழுப்பி மறைக்க முடியும்?

எழுத்திஞல் அவர் கண்ட பலன் இவைதான்:— எண்ணற்ற வாசக அன்பர்கள், எழுத்தாள நண்பர்கள், எழுத்தாள விரோதிகள், பாராட்டும் பத்திரிகைகள், பழிக்கும் பத்திரிகைகள், புகழைக் கண்டு பெருமைப்படு பவர்கள், பொருமை கொள்பவர்கள். சாதிக்கோ, சமயத் துக்கோ, கட்சிக்கோ வக்காலத்து வாங்காமல் அவர் தமக்குத் தோன்றிய உண்மைகளேத் துணிவாக எழுதியதால் அவருக்கு

ஆதரவும் எதிர்ப்பும் நிறைய இருந்தன. பலருக்கு அவரைப் புரிந்து கொள்ள முடியவில்லை.

எழுத்தாளர் எதைப் பற்றியும் கவலைப்படவில்லை. காசைப் பற்றிக்கூடக் கவலைப்படாமல் கஷ்டப்பட்டார்!

பொழுது போக்கிற்காகப் பழைய மாதிரிக் கதைகளையே எழுதி அவர் சுலபமாய்ப் பணம் சேர்த்திருக்கலாம். லட்சியத்தை எழுத்தில் மாத்திரம் வைத்துக்கொண்டு காரியத்தில் போலித்தனமாக நடந்திருக்கலாம். வெளியிலே வீரம் பேசிவிட்டு, பட உலகத்தின் பணத்திற்கு மண்டியிட்டிருக்கலாம். மூளையையும் மானத்தையும் அடகு வைத்து மாடிவீட்டில் வாழ்ந்திருக்கலாம். ஆனால் அவருக்கு இப்படி எல்லாம் வாழத் தெரியவில்லை.

ஆபீஸ் வேலையில் மனத்தைச் செலுத்த முயன்றார் அம்பலவாணன். முடியவில்லை. பத்து முறை ஒரு கணக்கைக் கூட்டிப் பார்த்தார். பத்து விதமான கூட்டல்கள் வந்தன! இரண்டும் இரண்டும் நாலு என்பது அரிச்சுவடிக் கணக்குத் தான். என்றாலும் அது ஒருமுறை ஏழாகவும் இன்னொரு முறை ஒன்பதாகவும் வந்தது. கோபத்தோடு கணக்குப் புத்தகத்தை ஒதுக்கிவிட்டுச் சற்று நேரம் சும்மா இருந்தார்.

அவர்தாம் சும்மா இருந்தாரே தவிர, அவர் மனம் சும்மா இருக்கவில்லை. வயிறும் சும்மா இருக்கவில்லை. வயிறு பசிக்கத் தொடங்கியது. மனம் எதை எதையோ சுற்றி வளைத்தது.

"பாவம், புவனாவால் இந்தச் செய்கையைத் தாங்கவே முடியாது. ஓடி ஓடி உழைக்கிறவள் ஒரு சொல் கோபத்தில் பேசிவிட்டால் இப்படித் தண்டிக்கலாமா?... இல்லை; இது சாதாரணச் சொல் அல்ல! அவளுக்கு இதுவும் வேண்டும்; இன்னமும் வேண்டும். பட்டினியோடு படுத்துக் கிடப்பாள், கிடக்கட்டும்!"

பசி அதிகரித்தது. காலையில் ஆரம்பித்த சிறுகதையின் கதாபாத்திரங்கள் அவர் கண்முன்னே தோன்றினார்கள்; 'கற்பனை குமுறிக்கொண்டிருந்த அந்தக் காலைப் பொழுது இப்படியா வீணாகவேண்டும்? எழுதத்தான் முடியவில்லை; சண்டையாவது மிச்சமாகக் கூடாதா? அதுபோகட்டும். ஆபீசில் இந்தப் பாழும் கணக்குப் பத்துமுறை கூட்டினாலும் சரியாக வரமாட்டேன் என்கிறதே? நல்ல வாழ்க்கை இது! கதை எழுதப் பிறந்தவன் கணக்கைக் கட்டிக்கொண்டு மாரடிக்க வேண்டியிருக்கிறது!'

மத்தியானம் வழக்கம்போல் நண்பர்களுடன் அவர் பக்கத்து ஓட்டலுக்குச் சிற்றுண்டிக்குப் போகவில்லை. வீட்டில் புவனா சாப்பிடாமல் பட்டினி கிடக்கும்போது தாம் இங்கே உண்பது அவருக்குப் பிடிக்கவில்லை. ஆனால் ஆபீஸ் நண்பர்கள் பொல்லாதவர்கள். அவரைக் கட்டாயப்படுத்தி அழைத்துச் சென்றார்கள். என்ன காரணத்தைச் சொல்லி மறுப்பது? தவிரவும் பட்டினியோடு ஆபீஸ் வேலையும் செய்ய முடியாது போலிருந்தது. ஆகவே வைராக்கியத்தைக் காற்றில் பறக்க விட்டு இட்டிலியும் காபியும் சாப்பிட்டு வைத்தார்.

சாயங்காலம் ஆயிற்று. சாக்குப்போக்குச் சொல்லி விட்டு நண்பர்கள் கூட்டத்திலிருந்து தனியே நழுவினார். ஆபீஸ் விட்டவுடன் நேரே வீட்டிற்குப் போக மனமில்லை. வேறு யார் இப்படிச் சொல்லியிருந்தாலும் அவர் பொருட் படுத்தி இருக்கமாட்டார். ஆனால் புவனாவே இப்படிச் சொல்லிவிட்டாள்!

குழந்தைகள் பிறப்பதற்கு முன்பு புவனா எழுத்தாளருக்கு மனைவியாக மாத்திரமில்லை. பெரிய பெரிய உத்தியோகஸ்தர் களுக்கு மட்டும்தானா அந்தரங்க காரியதரிசி இருக்க வேண்டும்?...அந்த உத்தியோகம் புவனாவுக்கு! எழுதுவதற்கு அவருக்கு உதவிசெய்வது, அவர் அவசரமாக எழுதிய வற்றைச் சரிபார்ப்பது, படித்துப் பார்த்து யோசனை சொல்வது முதலிய பல வேலைகளுக்கும் அவள் உதவியாக இருந்தாள். ஆனால் தாய்மைப் பொறுப்பின் கடமைகள்

அவளுடைய காரியதரிசி உத்தியோகத்திற்குக் குறுக்கே நின்றன. இந்த நிலையிலும் கூட அவருடைய முதல் ரசிகை அவள்தான்.

ஆபீசிற்கு அடுத்தாற்போல் கடைவீதியின் ஆரம்பத்தில் ஒரு சினிமாக் கொட்டகையும் பொட்டலும் எதிரெதிரே இருந்தன. பொட்டலில் யாரோ கழைக் கூத்தாடி வேடிக்கை காட்டிக் கொண்டிருந்தான். ஜனக்கூட்டம் நிறைந்திருந்தது. அதைப் போலவே சினிமாக் கொட்டகையின் வாசலிலும் வரிசையாக நின்றார்கள்.

எழுத்தாளர் கழைக் கூத்தாடியின் ஆட்டத்தைப் போய்ப் பார்க்கத் தொடங்கினார். உயர்ந்த மூங்கிலின் உச்சியில் நின்று கொண்டு ஒரு வாலிபக் கழைக்கூத்தாடி அற்புத அற்புதமான கரணங்கள் போட்டான். கைக் குழந்தை ஒன்றைக் கையில் வைத்துக்கொண்டு, தூக்கித் தூக்கி, வானத்தில் எறிந்து பிடித்தான். அவன் மனைவி கீழே தரையில் உட்கார்ந்து மேளம் தட்டிக் கொண்டிருந்தாள். பயங்கரமான விளையாட்டு. கரணம் தப்பினால் மரணந்தான். ஜனக் கூட்டம் கை தட்டித் தன் பாராட்டைத் தெரிவித்தது.

விளையாட்டு முடிந்து கலைஞனான கழைக் கூத்தாடி காசு வாங்க வந்தான். கூட்டத்தைச் சுற்றிலும் கை நீட்டிக் காசு கேட்டான்.

''கையிலே இருக்கிறவங்க காசு கொடுத்தாப் போதும். இல்லாதவங்க, கூட்டத்தை விட்டுப்போக வேண்டாம். இன்னம் இரண்டு ஆட்டம் காட்டறேன்'' என்றான்.

ஆனால் நிலைமை நேர்மாறாக இருந்தது. கையில் காசு உள்ளவர்கள்தான் சட்டைப் பையை இறுக்கிப் பிடித்துக் கொண்டு முதலில் கூட்டத்தை விட்டுச் சினிமாக் கொட்டகைப் பக்கம் நழுவினார்கள். உயிரும் துடிப்பும் உள்ள கலை உருவத்திற்குக் காசில்லை. இயந்திர உலகத்திற்குள்ளே போய் இன்பந் தேடப் புறப்பட்டுவிட்டார்கள். எழுத்தாளர் சட்டைப் பையைத் தடவி அரையணாக் காசை எடுத்துப் போட்டார். கலை உணர்ச்சி மாத்திரம் அல்ல அது.

கூடுமானவரை எதையும் இலவசமாய் அநுபவிக்கக் கூடாது என்பது அவர் கொள்கை.

அதே சமயம் அவருக்குக் காலையில் புத்தக இரவலுக்கு வந்த அப்பாத்துரையின் நினைவு வந்தது. காசு உள்ளவர்களுக்குத்தான் இந்தக் கஞ்சத்தனத்தின் அருமை அதிகமாய்த் தெரிகிறது. கலைஞன் இங்கே பிழைக்க முடிவதில்லை; கலைஞனை உபயோகப்படுத்திப் பிழைப்பவர்களுக்குக் கண்ணியமான வாழ்வு.

'புவனா சொல்வதில் என்ன தப்பு? ஒரு புத்தகத்தில் ஆயிரம் பிரதி விற்பதற்கு ஐந்து வருஷமாகிற இந்த ரசனை கெட்ட நாட்டில் எதற்காக எழுதவேண்டும்? யாருக்காக எழுத வேண்டும்? எழுதுகிற நேரத்தை ஆபீஸ் வேலையில் செலவு செய்தால் சீக்கிரம் நல்ல பதவிக்கு வந்துவிடலாமே!'

கூட்டத்தைவிட்டு அவர் வெளியே வந்தபோது அவரை யாரோ தூரத்தில் நின்று கை கூப்புவதுபோல் தெரிந்தது. தாமும் வணக்கம் செலுத்திவிட்டு உற்றுப் பார்த்தார். பதிப்பாளர் நாகலிங்கம் இன்னொரு புது மனிதருடன் எழுத்தாளரை நோக்கி வந்து கொண்டிருந்தார்.

"வாருங்கள், காபி சாப்பிட்டுக்கொண்டே பேசுவோமே! உங்களைப் பார்த்து ரொம்ப நாளாகிறது" என்றார் நாகலிங்கம். கூட வந்தவரையும் அறிமுகப்படுத்திவைத்தார். பெயர் சுந்தர பூஷணமாம். சில படங்களில் உதவி டைரக்டருக்கு உதவியாக இருந்தவராம். சந்தனப்பொட்டு, குங்குமப் பொட்டு, ஜவ்வாதுப்பொட்டு ஆகிய மூன்றுவிதப் பொட்டுக்களோடு மல் ஜிப்பாவும் ஆளுமாய்க் 'கம்'மென்று வாசனை வீசிக்கொண்டிருந்தார். வெற்றிலைக் காவியால் ரத்தச் சிவப்பாயிருந்தது உதடு.

"பிரசுரத் தொழிலுக்கு முழுக்குப் போட்டுவிட்டு வேறு நல்ல தொழில் செய்யத் தீர்மானித்து விட்டேன்" என்றார் நாகலிங்கம்.

"இப்போது புத்தகம் யார் படிக்கிறார்கள்? வட்டிக்குக் கட்டாத தொழில் ஒரு தொழிலா?" என்றார் சுந்தரபூஷணம்.

"அப்படியென்ருல் உங்களுக்குப் புத்தி வந்துவிட்டது!" என்ருர் எழுத்தாளர்.

"கஷ்டப்பட்டால் தன்ஞல் வரவேண்டியதுதானே?"

"என்ன தொழில் அது?"

"ஹோட்டல் வைக்க யோசனை. அத்தோடு நாலு அறைகளையும் வாடகைக்கு வாங்கிப் போட்டால் வந்து போகிறவர்களுக்குத் தங்கவும் வசதியாயிருக்கும்."

எழுத்தாளர் சிரித்தார். அந்தச் சிரிப்பில் அர்த்தம் இருந்தது.

"பலகாரம் நாக்குக்கு ருசியாயிருந்தால் சரி. வயிற்றுக்குள்ளே போன பிறகு வாந்தி பேதி வந்தால்கூட நமக்குக் கவலையில்லை" என்ருர் சுந்தரபூஷணம்.

"நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?" என்று எழுத்தாளரை நாகலிங்கம் கேட்டார்.

"புத்தியுள்ள யோசனைதான் இது. மிருகத்துக்கும் சரி, மனிதனுக்கும் சரி, வயிற்றுப் பசியும் உடல் பசியும் பொதுவானவை. இந்தமாதிரி அவசியத் தேவைகளை வைத்துச் செய்யும் தொழில் நஷ்டமடையாது."

சுந்தரபூஷணம் காபியைக் குடித்துக்கொண்டே சிரித்தார். "எல்லாம் நான் சொன்ன யோசனைதான்" என்ருர்.

"ஊதாரிகளையும் முட்டாள்களையும் ஏமாற்றிப் பிழைப்பது சுலபம். அது லாபகரமானதுதான். இலக்கியம் அப்படி இல்லை. மூளை உள்ளவனிடம் உண்மையை அழகாய்ச் சொல்லிப் பிழைக்க வேண்டியிருக்கிறது. அதஞல்தான் இங்கே எழுத்தாளனும் பதிப்பாளனும் சிரமப்படுகிருர்கள்" என்ருர் எழுத்தாளர்.

"வேறு இடத்தில் ஏமாறப் போகும் முட்டாள்கள் நம்மிடம் ஏமாறட்டுமே!" என்ருர் பூஷணம்.

சுந்தரபூஷணத்திடம் ஏமாந்த முதல் முட்டாளாக நாகலிங்கத்தைத் தமக்குள் எண்ணிக் கொண்டார் எழுத்தாளர். நாகலிங்கம் பணக்காரக் குடும்பத்தில் பிறந்த பையன். கல்யாணமாகாத இளம் பிள்ளை. பெண்களிடம்

கொஞ்சம் அதிகமான சபலம் உண்டு. சினிமாவுக்கு 'எக்ஸ்ட்ரா' நடிகைகளைச் சேர்த்துக் கொடுக்கும் சுந்தர பூஷணத்தின் கையில் அவர் அகப்பட்டிருப்பதைக் கண்டவுடன் எழுத்தாளருக்கு ஒன்றுமே பேசத் தோன்ற வில்லை.

சீக்கிரம் அவர்களிடமிருந்து விடுதலை பெற்று வீட்டுப் பக்கம் நடந்தார்; நடை பாதையில் வீசிய மெல்லிய மாலைக் காற்று அவருடைய மனத்திற்கு அமைதியைக் கொடுத்தது.

## 4

**வீ**ட்டிற்குள் நுழையப் போகும் சமயம் உள்ளே மனைவியின் குரலைக் கேட்டு ஒரு கணம் வாசற் கதவோரத்தில் தாமதித்தார்.

"ஏண்டா ராஜா! நீ செய்த குறும்புதானேடா இத்தனைக்கும் காரணம்? மூக்கைக் கடிக்காமல் உன் தங்கைக்கு முத்தம் கொடுக்கக் கூடாதோ! போக்கிரிப் பயலே, சண்டையை நீதான் தீர்த்துவைக்க வேணும். உன் அப்பாவைப்போல முன் கோபக்காரரை நான் பார்த்ததே இல்லை!"

அவளுடைய குரலில் ஒரே சமயம் சிரிப்பும் ஒலித்தது; அழுகையும் ஒலித்தது.

"எங்கேடா, இன்னும் அவரைக் காணோம்? நீ போய் அவரைக் கூட்டி வருகிறாயா? ஏண்டா, ராஜா?"

கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தார் அம்பலவாணன். பேசாமல் தம்முடைய அறைக்குப் போய் உடைமாற்றிக் கொண்டு குழாயடிக்கு வந்தார். அவர் போகுமிடமெல்லாம் அவர் பின்னாலேயே வந்து கொண்டிருந்த புவனாவை அவர் வேண்டுமென்றே கவனிக்க வில்லை. கைக் குழந்தை தொட்டிலில் தூங்கியது. பாரதி அடுத்த வீட்டிற்கு விளையாடச் சென்றிருந்தாள். ராஜா மாத்திரம் அவள் இடுப்பில் இருந்தான்.

சாய்வு நாற்காலியில் அவர் வந்து உட்கார்ந்தவுடன் புவனு தன்னிடமிருந்த பையனை அவர் மடியில் விட்டாள். மளமளவென்று பெருகிய கண்ணீரைச் சேலைத் தலைப்பால் துடைத்துக் கொண்டாள். காலையிலிருந்து பட்டினி கிடந்ததால் முகம் சோர்ந்திருந்தது.

"சாப்பிட வரமாட்டீர்களா?" என்று கெஞ்சினுள்.

"நீ சொல்லியதுதான் சரி, புவனு. இத்தனை நாளாய் எழுதி என்ன பலனைக் கண்டேன்? ஏதோ ஒரு வெறி. அந்த வெறிதான் என்னைப் பிடித்து ஆட்டுகிறது. உனக்கே பிடிக்கவில்லை என்ருல் விட்டுவிட முயற்சிக்கிறேன்."

"போதும், பேசாதீர்கள்!" என்று கத்திக் கொண்டே வந்து அவர் வாயைப் பொத்தினுள் புவனு. அவளுக்கு ஆவேசம் வந்துவிட்டது.

"உங்களால் எழுதாமல் இருக்க முடியாது, நீங்கள் எழுதுங்கள்; நிறைய எழுதுங்கள்; நீங்கள் எழுதப் பிறந்தவர்கள். யாருக்காகவும் எதற்காகவும் எழுத வேண்டாம், எனக்காக எழுதுங்கள், எனக்காகவே எழுதுங்கள்! உங்கள் அருமை எனக்குத் தெரியும்; தெரிந்துதான் உங்களோடு வாழ வந்தேன்; உங்களையும் உங்கள் எழுத்தையும் நினைக்கும்போது சில சமயம் என்னையறியாத பொருமை வந்து விடுகிறது. நானும் பெண்தானே? உங்களுக்கு இன்னெருரு காதலி இருந்தால் எப்படி எனக்குக் கோபம் வருமோ, அப்படிச் சில சமயம் உங்கள் எழுத்தின் மீது கோபம் கொள்கிறேன். ஆனுல் எழுதி முடித்து அதை என்னிடம் கொடுக்கும்போது நான் எவ்வளவு பெருமைப் படுகிறேன். தெரியுமா?

"நீங்கள் எழுதியதை எல்லாம் நான் எவ்வளவு திருப்பித் திருப்பிப் படித்து இன்பமடைகிறேன். உங்களுடைய தியாகம் எனக்குத் தெரிகிறது. தியாகம் என்பது மற்றவர்களுக்குத் தெரியும் அளவுக்கு இருக்க வேண்டியது இல்லையே! வசதியான வாழ்க்கை கிடைத்ததையெல்லாம் இந்த எழுத்திற்காக உதறித் தள்ளினீர்களே, எனக்குத் தெரியாதா? இனி ஒருக்காலும் அப்படிச் சொல்ல

மாட்டேன்; உங்களுடைய வெறியிலும் வெற்றியிலும், தோல்வியிலும் எனக்கு முழுப்பங்கு உண்டு. நீங்கள் நிறைய எழுதுங்கள்; எழுதிக் கொண்டே இருங்கள்.''

அவர் மடியில் உட்கார்ந்திருந்த ராஜா எங்கோ நழுவிச் சமையல் அறைப் பக்கம் நடந்தான். புவனு மழை கொட்டுகிற மாதிரி நிறுத்தாமல் பேசிக்கொண்டு போனாள். திரும்பத் திரும்ப அவரிடம் மன்னிப்புக் கேட்டாள். அவளுடைய இருதயத்தின் எல்லாக் கதவுகளும் உணர்ச்சிப் பெருக்கால் திறந்துகொண்டன.

தரையில் உட்கார்ந்து முழங்காலில் சாய்ந்து கொண்டாள்.

அம்பலவாணன் அவருடைய கதைகளில் வரும் உணர்ச்சி நிறைந்த கதாநாயகன் மாதிரி அவளை வெறியோடு வாரி எடுத்தார். வெகு நேரம் ஒருவரை ஒருவர் மெய்மறந்து பார்த்துக் கொண்டனர். அவருடைய முகம் அவள் முகத்தை நெருங்கியது.

''மூக்குப் பத்திரம்! உங்கள் அருமை மகன் கடித்த மாதிரி...''



# மனமும் மானமும்

விசாலத்தின் துன்பமுற்ற பழைய வாழ்க்கையைப்பற்றி நமக்கு இப்போது அக்கறை இல்லை; அதைப்பற்றி யாருமே எப்போதுமே அக்கறைப்பட்டதுமில்லை. அப்படி அக்கறைப் படுவதற்கு ஒரு ஆள் இருந்தால் அவள் ஏன் இந்தத் தொழிலைச் செய்து வயிற்றைக் கழுவுகிறுள்?

அன்றுடத் தேவையை—ஏன் அந்த நிமிஷத்துத் தேவையை என்று வேண்டுமானுலும் சொல்லலாம்—பூர்த்தி செய்து கொள்வதற்காகப் பேசுவார்கள்; சிரிப்பார்கள்; கெஞ்சுவார்கள்; மிஞ்சுவார்கள். அவள் இந்த மாதிரி நீண்ட நாள் அநுபவத்தில் அடிபட்டு உணர்ச்சியற்ற இயந்திரமாக மாறிவிட்டாள்.

இயந்திரம் இயங்குவதற்கு நெருப்போ, நிலக்கரியோ, நீரோ வேண்டியிருக்கிறது. ஒரு காலத்தில் அழகாயிருந்த இந்தப் பெண் இயந்திரத்துக்கும் உயிர் வாழ்வதற்குச் சோறும், சுற்றிக்கொள்ளச் சேலையும் வேண்டியிருந்தன. அதற்காக அவள் தன் அழகை விற்முள்; இளமையை விற்முள்; இன்பத்தை விற்முள்.—இந்த ஐந்து வருஷ காலமும்...ஐந்து வருஷங்களா அவை?

இருபது வயது விசாலமாக இருந்த அவள், இந்த ஐந்து வருஷங்களுக்கு ஐம்பது வருஷங்களின் தேய்வைப் பெற்று இருபத்தைந்து வயது விசாலமாகிவிட்டாள்.

மாலை ஐந்து மணி ஆயிற்று, சோர்வும் சோம்பலுமாய்க் கட்டிலில் புரண்டு கிடந்தவள் சோம்பல் முறித்துக் கொண்டே எழுந்தாள். வேண்டா வெறுப்போடு முகம் கழுவிப் பொட்டிட்டாள். கண்ணுடிக்கு முன்பாக

உட்கார்ந்து தன்னை அன்றையப் பொழுதுக்குத் தயார் செய்து கொண்டாள்.

அவளுக்கு எதிரே இருந்த பெரிய நிலைக்கண்ணாடி ஒரு மூலையில் உடைந்திருந்தது. அவளுடைய முகம் அதில் சரியாகத் தெரியவில்லை. விசாலம் அந்த மங்கலான உருவத்தைக் கண்டு ஒரு பெருமூச்சு விட்டாள். அது இன்னும் அதிகமாக மங்கியது.

வாசனைத் தைலங்கள் இப்போது அவளிடம் இல்லை. பௌடர் டப்பாக்கள் காலியாகிப் பல மாதங்களாகி விட்டன. சோப்பு மாத்திரம் அவளால் வாங்காமல் இருக்க முடியவில்லை. அதையும் மிகவும் குறைவாகவே அவள் உபயோகித்தாள்.

தேங்காய் எண்ணெயும் தண்ணீரும் கலந்து அவள் தலையை வாரிக்கொண்டாள். சேலைத் தலைப்பால் முகத்தை அழுத்தித் துடைத்துக் கொண்டாள். கண்ணாடிக்குப் பக்கத்தில் வாழை இலையில் இருந்த கதம்பச் சரத்தைத் தலையில் வைத்துக் கொண்டாள். இந்த ஏற்பாடுகளெல்லாம் முடிந்து அவள் மீண்டும் நிலைக்கண்ணாடியில் தன்னைக் கவனித்துக் கொண்டபோது அவள் கண்களின் ஓரங்களில் இரண்டு சொட்டு நீர் மணிகள் நின்றன.

சில நாட்களாகவே விசாலத்தின் தொழில் நிரம்பவும் படுத்துவிட்டது. அந்த வீட்டுப் பக்கம் வழக்கமாக வரும் ஆண்களின் சபல புத்திக் குறைவோ, அல்லது அவர்களுடைய சட்டைப் பைகளில் குலுங்கும் வெள்ளிப் பணத்தின் குறைவோ, அல்லது அவர்கள் அவளிடம் எதிர் பார்த்த சுகத்தின் குறைவோ தெரியவில்லை.

ஒரு வாரமாக யாருமே அங்கு எட்டிப் பார்க்கவில்லை. சோப்புக் கட்டி வீணாகத் தேய்ந்ததுதான் மிச்சம்; கதம்பச் சரத்துக்காகத் தினம் ஒரு அணா அவள் அழுது தொலைத்தது மிச்சம்—இந்த ஏழு நாட்களில் ஒரு முறையாவது அந்தக் கதம்பம் கசங்க வேண்டுமே!

நேற்று மத்தியானம் வீட்டுக்குச் சொந்தக்காரன் வந்து வாடகைக்காகக் கத்திவிட்டுப் போனான். அதே தெருவி லுள்ள அவளைப் போன்ற ஒரு பெண்பிள்ளை ஐந்து ரூபாய்க் கடன் காசுக்காக அந்தத் தெரு முழுவதையும் கூட்டி விட்டாள். வீட்டில் வேலை பார்க்கும் கிழவி அம்புஜத்தின் முணு முணுப்பு சில நாட்களாக எல்லை கடந்துவிட்டது. இதையெல்லாம் விசாலம் எண்ணிப் பார்த்தாள். தன்னைப் போன்ற தொழிலில் உள்ள பலர் அதிர்ஷ்டக்காரிகளாக வாழ்வதையும், தான் மட்டும் இப்படித் துன்பத்தால் சாவதையும் நினைந்து மனம் புழுங்கினாள்.

அவளால் இந்த அவல நிலையை இன்னும் இரண்டு நாள் கூடத் தாங்க முடியாதுபோல் இருந்தது.

கண்ணாடிக்கு முன்பாக எழுந்து நின்று விசாலம் தன் உடைகளைச் சரிப்படுத்திக் கொண்டு வாசல்பக்கம் வந்தாள். திண்ணையருகில் நின்றபடியே தெருவைப் பார்த்தாள். இளைஞன் ஒருவன் மெதுவாக அந்தப் பக்கம் வந்துகொண் டிருந்தான். அவனுடைய பார்வை, நடை, தோற்றம் எல்லாம் விசாலத்தின் நெஞ்சில் நம்பிக்கையை ஊற வைத்தன. தன் கூரிய கண்களை அவன்மீது பாயவிட்டு மெல்லப் புன்னகை பூத்தாள்.

கண்ணம்பு தோற்கவில்லை; புன்னகை வலை வீண்போக வில்லை. அவன் அசட்டுத்தனமாய்ச் சிரித்துக் கொண்டே அவளுடைய வாசலருகில் நின்று ஒரு கணம் தயங்கினான் அவளை மேலும் கீழும் பார்த்தான்.

"வாருங்களேன்" என்று கொஞ்சுவதுபோல விசாலம் அவனை அழைத்தாள். "உள்ளே வாருங்கள்" என்று அவனை அன்போடு அழைத்து வந்தாள். ஆம், அன்போடுதான்...

ஐந்து நிமிஷப் பேச்சுக்குள் அவள் அவனை ஒருவிதமாக அறிந்துகொண்டாள்; அவன் பணக்காரன், தாராள சுபாவ முள்ள கோழை; இந்தத் துறைக்குப் புதியவன். அவனுடைய முகத்திலும் பேச்சிலும் விசாலத்தையே மயக்கக் கூடிய

கவர்ச்சி இருந்தது—இந்த மாதிரி மீன்கள் எப்போதாவது ஒரு முறைதான் வலைக்குள் விழுகின்றன!

''நான் இனிமேல் அடிக்கடி இந்த ஊருக்கு வரவேண்டியிருக்கும்; வியாபார காரியமாக வருவேன்; வந்து...'' என்று அவளுடைய கண்களை உற்றுப் பார்த்தான்.

''வரும்போதெல்லாம் வாருங்கள்; கட்டாயம் வர வேண்டும். உங்களுக்கு எல்லா வசதிகளும் நான் செய்து தருகிறேன்.''

ஐந்து ரூபா நோட்டை முன்னதாக அவள் கையில் கொடுத்துவிட்டு, இரவு எட்டுமணிக்கு மீண்டும் வருவதாகச் சொல்லி வெளியே புறப்பட்டான். வந்த பிறகு இன்னும் அதிகப் பணம் கொடுப்பதாகப் பேச்சு.

வாசல் வரையில் அவனோடு நடந்து வந்தாள் விலாசம். அவன் கையை மெதுவாகப் பற்றிக்கொண்டாள். ''சீக்கிரம் வந்துவிடுங்கள். உண்மையாய்ச் சொல்கிறேன். உங்கள் பணத்திற்காகச் சொல்லும் பொய் அல்ல இது—உங்களை எனக்கு ரொம்பவும் பிடித்திருக்கிறது.''

அவன் அந்த அவளுடைய சாகஸம் என்று நினைத்துக் கொண்டானோ, என்னவோ. ஆனால் விசாலம் அதை உண்மையிலேயே உணர்ந்து சொன்னாள். அவளுடைய மனம் ஏனோ அன்று அந்த இளைஞனிடம் அவ்வளவு தூரம்லயித்துவிட்டது.

அவன் போன பிறகு அவள் கிழவியை அதிகாரத்தோடும் ஆனந்தத்தோடும் கூப்பிட்டாள். ஐந்து ரூபாயையும் அவளிடம் கொடுத்து, மலிவுரக வாசனைத் தைலம், உயர்வான ஊதுபத்தி, பழவகைகள், பூ, பலகாரம் எல்லாம் வாங்கி வரச் சொன்னாள்.

''அவன் வருகிறானோ என்னவோ! இந்த ஐந்து ரூபாய்க் காசையும் இப்படி மண்ணாக்கிவிட்டால் அப்புறம் நாளைக்கு என்ன செய்யப் போகிறாய்?'' என்று கத்தினாள் கிழவி.

''எல்லாம் எனக்குத் தெரியும். நீ போய்ச் சீக்கிரம் வா! பழங்களும் பலகாரங்களும் கொஞ்சமாக இருந்தாலும் நல்லதாக இருக்கவேண்டும், தெரிந்ததா?''

விசாலத்துக்குத் திடீரென்று இப்படிச் சந்தோஷப் பைத்தியம் பிடித்திருப்பது காதலுக்காகவா, காசுக்காகவா என்று அந்தக் கிழவிக்குச் சந்தேகமாக இருந்தது. கிழவி வெகுநாள் இந்தத் துறையில் அடிபட்டவளாகையால் அவளுக்கு இந்த மாதிரிப் பெண்களுடைய காதலைப் பற்றியும் கொஞ்சம் தெரியும்.

இரவு வந்தது. அவனும் வந்தான். அவனுடைய வருகைக்காக விசாலம் தன்னுடைய எல்லாச் சக்திகளையும் ஒன்று திரட்டி ஏற்பாடு செய்து வைத்தாள். இத்தனை கவனத்தோடு ஒருநாளும் அவள் தன்னை அழகுபடுத்திக் கொண்டதில்லை. இத்தனை வேகமாக என்றைக்குமே அவள் நெஞ்சு ஒருவனின் வரவுக்காகத் துடித்ததில்லை.

அவன் ஹோட்டலில் சாப்பிட்டு வந்ததாய்ச் சொன்னான். அறையில் உட்கார்ந்து இருவரும் கலகலப்பாகப் பேசத் தொடங்கினார்கள். பலகாரத்தையும் பழத்தையும் தட்டில் வைத்து அவனை எடுத்துக்கொள்ளச் சொன்னாள். தம்ளரில் பாலை ஊற்றிக் கொடுத்தாள். குடித்த பிறகு தளிர் வெற்றிலைகளாகப் பார்த்துப் பொறுக்கி, பாக்கும் சுண்ணாம்பும் சேர்த்து அழகாக மடித்து அவனிடம் நீட்டினாள். அவன் வெற்றிலை போட்டுக் கொண்டவுடன் அவனுடைய உதடுகள் இரத்தச் சிவப்பாய் மாறின.

நாழிகை சென்று கொண்டிருந்தது. விசாலம் ஏற்கனவே சந்தித்த மற்ற ஆண்வெறியர்களைப் போல அவன் அவசரமோ ஆத்திரமோ காட்டவில்லை; சிரித்துச் சிரித்துப் பேசிக்கொண்டே தன் உள்ளத்தில் இருந்ததையெல்லாம் கொட்டிக் கொண்டிருந்தான். விசாலத்திற்கு அவனுடைய பேச்சைக் கேட்பது பேரானந்தமாக இருந்தது. அவனைப் பற்றி எவ்வளவு அதிகமாய்த் தெரிந்து கொள்ள முடியுமோ அவ்வளவும் தெரிந்துகொள்ள விரும்பினாள். அவனுடைய தோளைத் தன் கரங்களால் பற்றிக்கொண்டே அவனிடம் கேள்விமேல் கேள்வியாகப் போட்டாள்.

"உங்களுக்குக் கல்யாணம் ஆகிவிட்டதா? எத்தனை வருஷங்களாகின்றன?"

"ஐந்து வருஷங்களுக்கு முன்பே ஆகிவிட்டது."

"குழந்தைகள் உண்டா?"

"இன்னும் இல்லை."

"உங்கள் மனைவிக்குச் சொந்த ஊர் எது? படித்திருக்கின்றாளா?"

"இதையெல்லாம் நீ ஏன் கேட்கிறாய்? இந்தக் கவலை உனக்கு எதற்கு?...நாழிகையாகிறதே!"

"உங்களுக்குப் பிடிக்கவில்லையென்றால் நான் கேட்கவில்லை. என்னவோ உங்களிடம் மாத்திரந்தான் இவ்வளவு ஆசையோடு பேசுகிறேன். எனக்கு இந்த ஆண்களிடமே பேசப் பிடிப்பதுமில்லை. அவர்கள் என்னைப் பேச விடுவதுமில்லை."

"நீ ஒரு புது மாதிரியான பெண்."

"நீங்களும் அப்படித்தான்!"

பிறகு அவன் தன் மனைவியின் ஊரைச் சொன்னான். "அவளுக்குச் சொந்த ஊர் புதுக்கோட்டை. ஏதோ கொஞ்சம் படித்திருக்கிறாள்."

"புதுக்கோட்டையா!"—அதிவேகத்தோடு கேட்டாள்.

"ஏன் அப்படிக் கேட்கிறாய்?"

"புதுக்கோட்டையில் எந்தத் தெரு?"

அவன் தெருவைச் சொன்னான். அவள் சற்று நேரம் யோசனை செய்தாள்.

"அவளுடைய பெயர்?"

"ஜயலக்ஷ்மி."

"வக்கீல் நாகரத்தினத்தின் பெண் ஜயாவா?"

"ஆமாம், அவளேதான்; உனக்கு அவளைத் தெரியுமா?" நீயும் அந்த ஊர்தானா?"

அவள் பதிலளிக்கவில்லை. தேள் கொட்டிய மாதிரிப் பதறிப்போய் அவன் தோளைவிட்டு விலகி உட்கார்ந்தாள். பயத்தோடு அவன் முகத்தை உற்றுப் பார்த்தாள்.

"அதனுலென்ன? ஏன் இப்படிப் பார்க்கிருய்?"—அவன் அவளுடைய கரத்தைப் பற்றப் போனுன்.

"தொடாதீர்கள்! தயவு செய்து இங்கிருந்து போய் விடுங்கள். சிறு வயதில் அவள் என் சிநேகிதி; நீங்கள் என் சிநேகிதியின் புருஷர்! உங்களைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன்; தொடவேண்டாம்!"

அவன் சிரித்தான். அந்தச் சிரிப்பு அவளைக் கேலி செய்வதுபோல் இருந்தது.

"இதோ பார்! விளையாட இது நேரமில்லை. இந்த வேதாந்தம் எனக்கு விளங்கவே விளங்காது. ஊரைப்பற்றி நீ கவலைப்பட்டது போதும். உன் கவலையை மறக்காதே!"

அந்த இளைஞன் இவ்வளவு வேகமாகப் பேசுவான் என்று அவள் எதிர்பார்க்கவில்லை. கோழையாக இருந்தவன், சந்தர்ப்பங்களின் தாக்குதலால் உணர்ச்சி வேகத்தோடு பேசினுன். ஏமாற்றத்தில் விளைந்த ஆத்திரம் இருந்தது அவனிடம்.

"தயவு செய்து நீங்கள் போய்விடுங்கள்; உங்களைக் கை யெடுத்துக் கும்பிடுகிறேன். போய்விடுங்கள்! இனி நீங்கள் இந்த வீட்டுப் பக்கம் வரவேண்டாம்." அவள் அவனருகில் உட்காராமல் எழுந்து சென்ருள்.

அவன் அவளுடைய கையை இறுகப் பற்றினுன். அவளைப் போகவிடவில்லை.

"உனக்கு வேண்டியது பணம்; எவ்வளவு வேண்டு மானுலும் கேள். இந்தச் சாகஸத்தை மட்டும் நிறுத்தி விடு!—நில்! போகாதே!"

"பணத்தால் எதையும் நீங்கள் வாங்கிவிட முடியாது. ஐயா என் தங்கைமாதிரி. அவளுக்கு நான் துரோகம் செய்ய மாட்டேன். முடியாது! போய்விடுங்கள்."

"பணத்திற்கு உன்னை விற்பதுதானே உன் தொழில்? நீதிபோதனை என்ன வேண்டியிருக்கிறது?—மானங் கெட்டவளே! இந்தா, இதில் நூறுரூபாய் இருக்கிறது. நான் பிடிவாதக்காரன்! இன்னும் எவ்வளவு பணம் வேண்டுமானாலும் இந்த அற்ப நேரத்துக்கு வாங்கிக் கொள்!"

"மானமுள்ள மனிதர்கள் எதற்காக மானங் கெட்டவளின் வீட்டிற்கு வருகிறீர்கள்? அற்பமான நேரத்துக்கு ஏன் உங்கள் அருமைப் பணத்தைக் கொட்டிக் கொடுக்கிறீர்கள்!—உங்கள் பணத்தைக் கொண்டு நெருப்பில் போடுங்கள். இது என் வீடு. ஒரு நிமிஷம் கூட நீங்கள் இங்கே இருக்கக்கூடாது. வெளியே போய்விடுங்கள்! நான் மானங் கெட்டவள்தான்; ஆனால் மனங்கெட்டவளல்ல. உடலை விற்பவள்தான்; ஆனால் உள்ளத்தை விற்பவளல்ல."

பணத்தை அவள் அவன் முகத்தில் வீசி எறிந்தாள். அவன் அதை எடுத்துக்கொண்டு போய்விட்டான்.

அவன் போன பிறகு அவள் நடுச்சாமத்தில், இருளுக்கு மத்தியில் தேம்பித் தேம்பி அழுதாள். வீட்டு வாடகைக் காரனையும் ஐந்து ரூபாய்க் கடன்காரியையும், அடுத்த நாள் சோற்றுக்கு அரிசி வாங்க வேண்டிய அவஸ்தையையும் நினைத்துப் பார்த்து அழுதாள்!



# அருவிக் கரையில்

கனவு உலகம், கற்பனை உலகம், ஆவி உலகம் என்று சொல்கிறார்களே, இவற்றில் அப்போது நான் எந்த உலகத்தில் இருந்தேனோ தெரியாது. கனவாகவே இருக்கலாம். அதையும் நிச்சயமாய் எப்படிச் சொல்வது? எனக்குத்தான் விழித்திருக்கும்போதே கனவு காண்பதும் கனவு காண்பதை விழிப்பென்று நினைப்பதும் வழக்கமாயிற்றே!

குற்றாலத்தில் அப்போது கோடை காலம். பத்து நாள் பொழுதை நிம்மதியாய்க் கழிக்கத் தீர்மானித்தேன். பெரிய பங்களா ஒன்றின் சிறிய அறையை வாடகைக்கு எடுத்தாயிற்று. பார்ப்பதற்குப் பசுமைக் காட்சி, படிப்பதற்குப் புத்தகங்கள், குளிப்பதற்குக் குளிர் அருவி, நினைப்பதற்கு நெஞ்சும் நானும், வேறென்ன வேண்டும்?

வந்த அன்றைக்கு முதல் நாளிரவு ஒன்பது மணிக்கு மேல் ஓட்டலில் சாப்பிட்டுவிட்டு அருவிக்கரைப்பக்கம் நடந்தேன். பூரணச் சந்திரன் அருவி நீரில் கரைந்து பாலாகப் பொங்கி ஊற்றியது. அந்த நேரத்தில்கூட அங்கே கூட்டத்திற்குக் குறைவில்லை. ஆணும் பெண்ணும் தனித் தனியாகவும் ஒன்று சேர்ந்தும் குளிப்பதற்காக வந்து போனார்கள்.

நேரம் போனதே தெரியவில்லை. நினைவுப் பெருக்காகிய அருவியில் என்னுடன் நேரமும் காலமும் சேர்ந்து குளித்தன.

தூரத்தில் ஏதோ சத்தம் கேட்டு விழித்துக் கொண்டேன். சுற்று முற்றும் பார்த்தபோது குளித்துக் கொண்டிருந்தவர்களில் ஒருவரையும் காணோம். மனித

சஞ்சாரமே அற்றுவிட்டது. இரவு ஒரு மணியாவது ஆகியிருக்க வேண்டும்? இந்த வேளையில் என்ன சத்தம்?

சற்றுத் தொலைவில் எனக்கெதிராக ஒரு உருவம் ஓட்டமும் நடையுமாய் வந்தது. எழுந்து அறைக்குக் கிளம்ப நினைத்தவன் சிறிது தாமதித்தேன்.

அந்த உருவம் வேறெங்கும் போகவில்லை. நேரே என்னைப் பார்த்துக்கொண்டு என் முன்னே வந்து இரைக்க இரைக்கப் பெருமூச்சுவிட்டுக் கொண்டு நின்றது. கவனித்தேன்—அவள் ஒரு பெண்பிள்ளை. வெள்ளைச் சேலை உடுத்தியிருந்தாள். தலைமயிர் அவிழ்ந்து இடுப்புக்குக் கீழே தொங்கியது. அழகும் கவர்ச்சியும் சேர்ந்த முகந்தான்.

மோஹினிகளை நான் கண்டதில்லை; ஆவி உலகத்து அப்ஸரஸ்களையும் சந்தித்ததில்லை. அவர்கள் இப்படித்தான் இருப்பார்களோ?

''கல்லைப் போல் உட்கார்ந்திருக்கிறீர்களே! நீங்கள் மனிதரா? இல்லை, சிலையா?''

இப்படிக் கேட்ட வண்ணம் அவள் என் எதிரில் இரண்டடி தள்ளிப் பாறையில் உட்கார்ந்தாள். ஒரு மாதிரி தலையைச் சாய்த்துக் கொண்டு என்னைக் கோணல் பார்வை பார்த்தாள். அந்தப் பார்வை பயங்கரமாக இருந்தது. நிச்சயம் அதில் மனிதத்தன்மை இல்லை.

''ஏன் இப்படிப் பயந்து சாகிறீர்கள்? நான் உங்களைக் கடித்தா தின்று விடுவேன்!''

எனக்கு என்ன சொல்வதென்று விளங்கவில்லை. நாக்கு தொண்டைக்குள் பதுங்கிக் கொண்டது. இவள் பெண்ணா அல்லது பேயா? மனசுக்குள் லேசான உதைப்புக் கண்டது.

''முகத்தைப் பாருங்கள், பேயறைந்த மாதிரி!''

நான் திடுக்கிட்டேன். என் வாயிலிருந்து ஒரு வார்த்தை கூடக் கிளம்பவில்லை.

"ஆண் பிள்ளைகள் அத்தனை பேருமே கோழைகள்! பயந்தாங்கொள்ளிகள். பெண்டாட்டி அழகாயிருந்தால் பயம், அவலட்சணமாக இருந்தால் பயம், படித்தவளா யிருந்தால் பயம், படிக்காதவளாயிருந்தால் பயம்!"

சிறிது துணிவு வந்தது எனக்கு, "எனக்கு அந்தப் பயமே கிடையாது; இன்னும் கல்யாணமாகவில்லை!" என்றேன்.

"பெண்ணை வைத்து வாழப் பயந்தவர்!"

"உன் மாதிரிப் பெண் வந்து வாய்த்தால் எப்படி வாழ்வது?" என்றது மனம்.

வேறு எதை எதையோ அவள் உளறிக் கொட்டினாள். சம்பந்தமில்லாமல் புதிர்கள் போட்டாள். கேள்வி கேட்டு என்னைத் திணற வைத்தாள். கடைசியாக, "ஒரே ஒரு ஊரிலே இரண்டு பேர் இருந்தார்களாம்" என்று கதை ஒன்று ஆரம்பித்தாள்.

கதையைக் கேட்பதைத் தவிர எனக்கு வேறு வழியில்லை. என்னை அங்குமிங்கும் அசைய விடாதபடி நிறுத்தி, அவள் தன் மனம் போனபடி அந்தக் கதையைச் சொல்லிக் கொண்டு போனாள். கதை சுவையோடிருந்ததால் கவன மாகக் கேட்டேன்.

## 2

இதுதான், கதைச் சுருக்கத்தில் ஒரு பகுதி:—

சென்னையில் வளர்ந்த சீதா பி. ஏ. ஹானர்ஸ், திருநெல் வேலிக்கார ராமன் எம்.ஏ.எல்.டி.யைக் கல்யாணம் செய்து கொண்டாள். ராமனுக்குக் கல்லூரியில் பேரா சிரியர் வேலை. இரண்டு பேரும் இரண்டு வருஷகாலம் வெளி உலகத்தையே மறந்து, இலக்கியங்களில் வருகிற இலட்சியத் தம்பதிகள் போல் வாழ்ந்தார்கள்.

மூன்ருவது வருஷம் வந்தது.

திருநெல்வேலியை விட்டு இரண்டு மைல் தள்ளிப் பாளையங் கோட்டையின் நவநாகரிகப் பகுதிக்கு இருவரும் குடி மாறினுர்கள். வெளி உலகின் நாகரிகம் வீட்டிற்குள்ளும் திடீரென்று புகுந்தது. சீதா 'காஸ்மாபாலிடன் கிளப்' மெம்பராஞள்; ராமன் கம்பர் கழகத்தின் காரியதரிசியாஞர்.

மூன்ருவது வருஷம் மூன்ருவது மாதம் இருவரும் நேர் எதிரிடையான வழிகளில் வெகு வேகமாய்ப் போய்க் கொண்டிருந்தார்கள். அதிலும் சீதா பி. ஏ. ஹானர்ஸ் கொஞ்சம் தீவிரமான நாகரிகவாதி.

சீதாவுக்கு ராமன் கர்நாடகப் பேர்வழி. ராமனுக்குச் சீதா அடங்காப் பிடாரி.

நாலு பேர்களிடம் அவள் நாணமின்றிப் பழகுவது அவருக்குப் பிடிக்கவில்லை. கட்டுப் பெட்டியாக நடந்து கொள்ளும்படி உபதேசம் செய்தார். படிதாண்டாப் பத்தினியாக இருக்கும்படி பயமுறுத்திஞர். அளவுக்கு மீறிய அதிகாரம் வெளிப்பட்டது.

"உன்னுடைய திருவல்லிக்கேணி நாகரிகத்தை இங்கே தாம்பிர வருணித் தண்ணீரிடம் காட்டாதே!" என்றுகூட ஒருநாள் அவளுடைய சிநேகிதிகள் முன்னிலையில் சொல்லி விட்டாராம்.

இதைச் சொல்லும்போது அவள் முகம் கோபத்தால் சிவந்தது. இந்தக் கட்டத்தில் கதையை நிறுத்திக் கொஞ்சம் யோசனை செய்தாள். நான் கதை கேட்கும் சுவாரஸ்யத்தில் அவள் முகத்தையே கவனித்தேன். அவள் மேலே தொடர்ந்தாள்.

"இப்படிப்பட்ட புருஷன் இருந்தால் என்னுடைய சிநேகிதிகள் என்னை மதிப்பார்களா? சிநேகிதர்கள் கௌரவத்தோடு என்னிடம் பழகுவார்களா? அவருக்கோ இதைப் பற்றிக் கவலையே கிடையாது."

'என்னுடைய' என்று அவள் வாய் தவறிச் சொல்லு முன்பே நான் அவளுக்கும் சீதாவுக்கும் ஏதாவது தொடர் பிருக்க வேண்டும் என்று தீர்மானித்தேன். அவள் வாயாலேயே அவள் கதையை முடிக்கிறேன்!

"ஒருநாள் இரவு சினிமாவிலிருந்து திரும்பியவர் வெறி பிடித்தவர் மாதிரி கத்தினார். 'ஒன்று நீ உன்னுடைய 'சோஷலிஸ'த்தைத் தலை முழுக வேண்டும்; இல்லாவிட்டால் என்னைத் தலைமுழுக வேண்டும்! என்ன சொல்கிறாய்?' என்று கேட்டார்.

"எனக்கு மாத்திரம் ஆத்திரம் வராதா, என்ன? நானும் பதிலுக்குக் கத்தினேன். 'நான் உங்களின் அடிமையல்ல, யாராயிருந்தாலும் என் சுதந்திரத்தைப் பறிக்கவிடமாட் டேன்!' என்று அழுத்தந் திருத்தமாய்ச் சொன்னேன்."

கதையை முடித்து விட்டவள்போல் அவள் சும்மாயிருந் தாள்.

"அப்புறம்?" என்றேன் நான்.

"ஒரே அடியில் ரூல்கழியால் என் மண்டையைப் பிளந்து விட்டார். நான் செத்துப்போனேன்!"

என்ன! செத்துப்போன சீதாவா இது?...

எலும்புக் குருத்துக்குள் ஈட்டி பாய்கிற மாதிரி இருந்தது எனக்கு. இந்த நடுநிசியில் இந்தப் பெண்பேயிடமிருந்து, அதிலும் படித்த பெண்பேயிடமிருந்து, எப்படித் தப்புவது?-கதை சொல்லும்போது ஆண் வர்க்கத்தையே அழித்து விடுகிற மாதிரியல்லவோ அதன் குரல் ஒலித்தது!

திடீரென்று அவளிடம் ஒரு மாறுதல் தெரிந்தது. தலையைக் கவிழ்த்துக் கொண்டு, தன்னுடைய முழங்காலைக் கட்டிக்கொண்டு, ஓவென்று கதறியழத் தொடங்கினாள். அவளுடைய கூந்தல் கருநாகக் கூட்டம்போல் நெளி நெளி யாக வளைந்து அவளையே மறைத்துக் கொண்டது.

பெண்ணென்றால் பேயும் இரங்குமென்பார்கள். பேயின் நிலைக்கு யார் இரங்குவது?

திக்கலும் தேம்பலுமாய் அவள் பேசினுள்:

"பெண் புத்தி பின் புத்திதான். ஆத்திரத்தில் நான் அறிவிழந்தேன். அவர் தங்கமான மனிதர். அன்பைக் கொட்டுவதற்கு அவரைப்போல் வேறு யாருமே இருக்கமாட்டார்கள்.

"முதல் இரண்டு வருஷம் கோடைக்கு இங்குதான் வந்தோம். அந்த இன்ப நாட்களை மறக்க முடியுமா? ஏழேழு ஜன்மத்திற்கும் நான் அவருக்குக் கடமைப்பட்டவள். 'சீதா!' என்று வாய் நிறைய அவர் அழைக்கும் ஒரு சொல்லுக்காகவே அவர் கையால் நூறுதரம் சாகலாமே! கணவன் மனைவிக்குள்ள தொடர்பின் அருமை உங்களுக்கு எப்படித் தெரியும்?"

உட்கார்ந்திருந்த சீதா எழுந்தாள். பழையபடியே ஒரு கோணல் பார்வையுடன் விர்ரென்று திரும்பி அருவிக்கரைப் பாலத்தின் மேல் நடந்தாள்.

பெரிய சுமை இறங்கியது போலிருந்தது எனக்கு. அந்தப் பக்கம் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை. கீழே விரித்த துண்டை எடுக்க மறந்து, அவசரம் அவசரமாய் அவ்விடத்தைவிட்டுக் கிளம்பினேன்.

## 3

பூழு நிலவு மேகத்திற்குள் மறைந்ததால் இருட்டுப் பரவியது. பயத்தினுல் மனம் பதை பதைக்க ஓடுகிறேனு நடக்கிறேனு என்பது தெரியாமல் வந்து கொண்டிருந்தேன். இருபது கெஜ தூரத்தில் இருந்த அரசமரத்தின் நிழலில் அதிகக் கருமை தென்பட்டது.

"ஸார்!..."

யாரோ கூப்பிட்ட மாதிரி இருந்தது. நான் திரும்பிப் பார்க்கவில்லை; இன்னும் வேகமாக நடந்தேன்.

"ஸார்! உங்களைத்தான், ஸார்!"

அதட்டும் குரல் ஒன்று என்னைத் தடுத்து நிறுத்தியது. இருளை ஊடுருவிப் பார்த்தேன். விநாயகரின் சிலையில் தன் முதுகைச் சாய்த்துக்கொண்டு தாடியும் மீசையுமாய் ஓர் உருவம் கால் நீட்டிப் படுத்திருந்தது. வெறித்துப் பார்த்தேன். நீட்டிய காலை மடக்காமலும், சாய்ந்த முகத்தை நிமிர்த்தாமலும் அது என்னை விசித்திரமாக நோக்கியது.

''இப்படி வாருங்கள், ஸார்! எங்கே இந்த ஓட்டம்? அந்த அம்மாள் வந்த பிறகுதானே நீங்கள் போகவேண்டும்!''

மந்திரத்தில் கட்டுப்பட்ட மாதிரி நான் போய் அதன் அருகில் நின்றேன். ஆண் உருவந்தான். தலையைப் போலவே தேகமெங்கும் மயிர்க் காடாயிருந்தது. இடுப்பில் சுற்றியிருந்த சிறு துண்டைத் தவிர வேறு உடை இல்லை.

''அது யார்? உங்கள் சம்சாரமா?'' என்று கேள்வி பிறந்தது.

''இல்லை; யாரோ தெரியாது!'' என்றேன்.

''காலம் கெட்டுப் போச்சு, ஸார்!''

உண்மைதான்! காலம் கெடாவிட்டால் இப்படி நான் பெண் பேயிடமிருந்து தப்பி ஆண் பேயிடம் அகப்படுவேனு?

''அர்த்த ராத்திரி வேளையில் ஒரு பெண்பிள்ளை தனியாக இந்தப் பக்கம் வரலாமா? முன்பின் தெரியாதவரிடம் பேசலாமா? இந்த மாதிரிப் பெண்களை நம்புவதைவிடப் பேய்களை நம்பலாம், ஸார்!''

பேய்! சீதாவின் ஞாபகம் எனக்கு வந்தது

''நான் அநுபவத்தில் பேசுகிறேன். கொஞ்ச நாளைக்கு முன் பத்திரிகையில் படித்திருப்பீர்களே! நான்தான் ராமன் எம். ஏ. எல். டி.—ஒரே அடியில் அவளைத் தீர்த்துவிட்டேன்.

''மனுஷனுக்கு மானந்தான் பெரிது. அதைக் காப்பாற்றத் தெரியாதவன் இருந்தென்ன? இல்லாவிட்டால் என்ன? இது தமிழ்நாடு, ஸார்! அமெரிக்கா இல்லை.

"ஒரு நாள் சினிமாவுக்குப் போயிருந்தேன். எதிர் வரிசையிலிருந்த நாலு பெண்களும் இவளைப் பற்றியே பேசிக் கொண்டிருந்தார்கள், 'புருஷன் கையாலாகாதவனாய் இருந்தால் எல்லாம் அப்படித்தான்' என்றுகூட அவர்கள் சொல்லிக் கொண்டார்கள்.

"பாதி ஆட்டத்தில் வீட்டிற்கு வந்தேன். அவளை ஒரே அடியில் எமலோகத்திற்கு அனுப்பிவிட்டேன்."

ராமன், சீதா இருவர் சொல்லிய கதைகளையும் நான் முடிச்சுப் போட்டேன். ராமனிடமிருந்து நீண்ட பெருமூச்சும் ஒரு விம்மலும் வெளிப்பட்டன.

"அவள் உத்தமி! மாசு மருவற்ற பச்சைக் குழந்தை! நல்லது கெட்டது அவளுக்குத் தெரியாது. அவள் போன பிறகு நிமிஷ நேரங்கூட எனக்கு நிம்மதி இல்லை."

அதைச் சொல்லும்போது அவர் கண்களில் நீர் பெருகி ஓடுவதைக் கவனித்தேன்.

"சட்டம் என்னை மதிக்கவில்லை. போலீஸ்காரர்கள் பிடிக்க மறுக்கிறார்கள். நீதிபதி தூக்குப்போட மறுக்கிறார். அதனால் எனக்கு நானே தண்டனை கொடுக்கப் போகிறேன். இன்னும் அரைமணிக்கெல்லாம் அருவியில் குதித்து மிதக்கப் போகிறேன், பாருங்கள்!"

இந்தக் கட்டத்தில் என்ன செய்யவேண்டும் என்பது எனக்குப் புரியவில்லை. ஒரு புறம், சீதா அருவியில் நனைந்துவிட்டு ஈரப் புடவையுடன் அங்கு வந்து கொண்டிருந்தாள். இன்னொரு புறம், யாரோ தூரத்தில் நான்கைந்து பேர் சேர்ந்த சிறு கூட்டம் திருடனைப் பிடிக்க வருவதுபோல் எங்களை நோக்கி ஓடிவந்தது.

கூட்டம் அருகில் வந்ததும் பேச்சுக் குரல் காதில் விழுந்தது.

"அடே! இங்கே இரண்டும் ஆனாக இருக்குதடா!" என்றான் ஒருவன்.

“அதோ பார்! அங்கே ஒரு பெண் வருது” என்றான் மற்றொருவன்.

“இரண்டைத்தேடி வந்தால், மூணு இருக்குதடா!”

“நிலாக்காலம் வந்துவிட்டாலே இதுகளுக்குக் கொண்டாட்டந்தான்” என்று வேறு ஒருவன் சொல்லிச் சிரித்தான்.

“சரிடா! சாமி காத்துக் கொண்டிருக்கும்; வாருங்கள் இதுகளை இழுத்துக்கொண்டு போவோம்.”

வந்தவர்கள் தங்களுக்குள் பேசினார்கள்; முடிவு செய்தார்கள்; நடவடிக்கை எடுத்துக்கொண்டார்கள். மயிர்க் கூச்செரியும் திரைப்படத்தின் சம்பவங்கள் போல் காரியங்கள் மளமளவென்று நடந்தன. மூன்று பேரையும் இழுத்துப் பிடித்து கைகளில் விலங்கை மாட்டினார்கள். ராமன் அவர்களைக் கண்டபடி திட்டினார்; முஷ்டியை ஓங்கிக் காண்பித்து அடிக்கப் போனார். சீதா கதறி அழுதாள்; வர முடியாது என்று சண்டித்தனம் செய்தாள். நான் என் சக்தி முழுவதையும் இழந்து மௌனமாக அவர்களுடன் சென்றேன்.

குற்றாலத்துக் கோவிலுக்கு எதிரே தெரிந்த சாலையில் நாங்கள் அந்த நள்ளிரவில் இப்படி இழுத்துச் செல்லப்பட்டோம்.

## 4

அரை மைல் தூரம் நடந்த பிறகு மருத மரங்கள் சூழ்ந்த பெரிய தோட்டத்திற்குள் நாங்கள் நடந்தோம். தோட்டத்தின் மத்தியில் வரிசை வரிசையாகச் சின்னஞ்சிறு அறைகள் தெரிந்தன. அறைகளிலிருந்து நானாவிதமான குரல்கள் எழுவதைக் கேட்டேன். ஆடல், பாடல், அலறல், உளரல், கூத்து, கும்மாளம் இப்படி ஒரே கதம்பக் கச்சேரியாக இருந்தது. எங்களை ஓர் ஓரத்தில் தனியாக இருந்த பெரிய அறைக்குக் கொண்டு போனார்கள். அறைக்குள்ளே மான் தோல் போட்ட சாய்வு நாற்காலியில்

சாமியார் ஒருவர் உட்கார்ந்திருந்தார். மங்கலான விளக்கு வெளிச்சத்தில் உட்கார்ந்திருந்தவாறே சாமியார் என்னை உற்றுப் பார்த்தார். நானும் அவரைப் பதிலுக்குப் பார்த்தேன்.

அவருக்குப் பின்னால் தொங்கிய துணித் திரையில் கொட்டை எழுத்துக்களில் இந்த விளம்பரம் காணப்பட்டது: "பைத்தியத்திற்கு வைத்தியம் செய்யப்படும். மணி மந்திர ஔஷதங்களால் சகல விதமான மூளைக் கோளாறுகளும் தீர்க்கப்படும்—சுவாமி பிருமானந்தர்."

இதைப் பார்த்த பிறகுதான் எனக்கு உண்மையிலேயே மூளை குழம்பி விடும்போல் தோன்றியது.

"இது யார், புதிதாய் இருக்கிறதே?" என்று கேட்டார் சாமியார்

வைத்தியர் சுவாமிகளின் சிஷ்யர்கள் பரிதாபமாய் விழித்தார்கள். நல்ல சமயம் என்று நான் என்னுடைய கதைச் சுருக்கத்தை அவரிடம் சொல்லி முடித்தேன். விலங்குகளிலிருந்து முதலில் விடுதலை கிடைத்தது. சாமியார் ஆசனம் அளித்து என்னை உட்காரச் செய்தார். பலமுறை என்னிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டார்.

இந்தச் சமயத்தில் ஓர் அதிசயம் நடந்தது. திடீரென்று ராமனும் சீதாவும் ஒருவரை நோக்கி ஒருவர் ஓடி வந்தார்கள்.

"சீதா" என்று அலறினார்—ராமன்.

"யார்? நீங்களா!" என்று அவர் காலில் விழுந்தாள் சீதா.

அவர்களைத் தனியே அங்கு விட்டு விட்டு நாங்கள் அடுத்த அறைக்குச் சென்றோம். சாமியாரிடமிருந்து எனக்கு அவர்களைப் பற்றிய முழு விவரமும் கிடைத்தது.

"ராமன் அவளைக் கொன்று விட்டதாக நினைத்தார்; அதே நிமிஷத்தில் அவருக்கு நினைவு தவறியது. சீதாவும் அந்த அடியால் மூளை கலங்கித் தான் இறந்து போனதாகவே நினைத்துக் கொண்டாள். ராமன் இங்கே சிகிச்சைக்கு வந்து மூன்று மாதம் ஆகிறது. இன்றுதான் சீதாவைக் கொண்டு

வந்தார்கள். இது வரையில் காயம் ஆறுவதற்காக அவள் ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டிருந்தாள்.''

''அவர்கள் இதற்கு முன்பு சந்திக்கவே இல்லையா?''

''சந்திக்க ஏற்பாடு செய்தேன்; ஒருவரை யொருவர் புரிந்து கொள்ளவில்லை. இப்போது உங்களுக்கு முன்னால் அடையாளம் கண்டு கொண்டார்களே, அதுதான். இனிமேல் சீக்கிரம் குணமாகி விடும்.''

''பாவம்! படிப்பும் பண்பும் உள்ளவர்களுக்கா இந்தக் கஷ்டம் வர வேண்டும்? ஒருவரிடம் ஒருவர் உயிரையே வைத்திருக்கிறார்களே!'' என்றேன் நான்.

''படிப்பு இருக்கிறது; ஆனால் பண்பு இல்லை! நல்லவர்களாக மாத்திரம் இருந்தால் போதுமா? நல்லவர்களைப் போலவும் இருக்கவேண்டும். நல்லவர்களோடும் பழக வேண்டும். புருஷனின் நோக்கத்திற்கு விரோதமாக நடப்பதுதான் சுதந்திரமென்று எண்ணிவிடக் கூடாது. சீதாவைப் போன்ற பெண்கள் தமிழ்ப் பண்பை உணரா விட்டால் குடும்பங்கள் சிதைந்து போகும்'' என்றார் சாமியார்.

நடை உடை பாவனைகளிலும், பழக்க வழக்கங்களிலும் இந்தப் பண்பை மறந்து வரும் நவீன நாகரிகப் பெண் பைத்தியங்களை நினைத்துக் கொண்டே நான் அந்தப் பைத்திய வைத்தியரிடமிருந்து விடை பெற்றுக் கொண்டேன்.



# வழி பிறந்தது

இன்றைக்கும் கமலம் அதிகாலையில் எழுந்து விட்டாள். ஆனால் வழக்கம் போல் மற்ற வேலைகளைக் கவனிக்கவில்லை. குளிப்பு, மாற்றுடை, தியானம், படிப்பு, எழுத்து எதிலும் மனம் ஓடவில்லை. இரவு முழுவதும் தூக்கம் வராமல் படுக்கையில் புரண்ட சோர்வு அவளுடைய கண்களில் தேங்கி இருந்தது. அறை விளக்கைக்கூடப் போட்டுக் கொள்ளாமல் ஜன்னலோரத்தில் வந்து உட்கார்ந்து வெளியே பார்த்தாள்.

விக்டோரியா பெண்கள் ஹாஸ்டலின் மற்ற அறைகள் இன்னும் விழித்துக் கொள்ளவில்லை. பனிக்காலமாதலால் அவை நிம்மதியாய்ப் போர்வையை இழுத்து விட்டுக் கொண்டு உறங்கின. கமலம் சிறிது சிறிதாய் ஒளி பெற்றுக் கொண்டு வந்த கல்லூரிக் கட்டிடத்தையும் அதைச் சுற்றியுள்ள விளையாட்டுப் பொட்டலையும் கவனித்தாள். கீழ்வானத்தில் உதயகன்னி வண்ணக்கோலம் தீட்டத் தொடங்கியவுடன் அவள் கவனம் அங்கே திரும்பியது. மார்கழி மாதத்தின் காலைப்பொழுதல்லவா? நெருப்பின் கொழுந்துகளாலான ஆயிரம் ஆயிரம் பறங்கிப் பூக்களை உதயகன்னி அங்கே அடுக்கடுக்காய் நட்டு வைத்துக் கொண்டிருந்தாள்.

தை பிறக்கப் போகிறது. கமலம் நீண்ட பெருமூச்சு விட்டாள். சுமார் இருபது வருடங்களின் துன்பங்களைச் சுமந்து அது வெளியே வந்து குளிர் காற்றுடன் கலந்தது. அவளுக்கு இனி ஒரு முறை வழிபிறக்க வேண்டியதில்லை. எப்போதோ பிறந்து விட்டது. பிறந்த வழி இன்னும் திறக்க வில்லை. திறக்குமா? திறக்கலாமா?

கமலத்தைப் பார்த்தவர்களுக்கு அவளுடைய வயசைச் சொல்ல முடியாது. முப்பத்தைந்து என்றால் யாரும் நம்ப மாட்டார்கள். இளமை அவளை விட்டுக் கொஞ்சமும் விலகாமல் இன்னும் அப்படியே அவளைச் சூழ்ந்து கொண்டிருந்தது. வட்டமான முகத்தில் பதிந்த நீண்ட விழிகள் கனவு காண்பதையே தொழிலாகக் கொண்டிருந்தன. பகற்கனவு காணும் இளங்கவியின் கிறக்கத்தை எப்போதும் அந்தக் கண்களில் காணலாம்.

கிறிஸ்தவர்களின் ஸ்தாபனமான அந்தக் கல்லூரியில் அவள் வந்து ஒன்றாய் ஒட்டிக்கொண்டு விட்டாள். பத்துப் பன்னிரண்டு வருஷங்கள் ஆகின்றன. கமலம் எம். ஏ., எல். டி. என்றால் மாணவிகளுக்கும் சரி, ஆசிரியைகளுக்கும் சரி, தனி அன்பு. எப்போது பார்த்தாலும் ஏதாவது படித்துக் கொண்டோ, எழுதிக்கொண்டோ, பயனுள்ளதைப் பேசிக் கொண்டோ இருப்பாள். கமலம் எழுதிய துணைப் புத்தகங்களுக்குக் கல்வி உலகத்தில் வரவேற்புக்குக் குறைவில்லை.

கமலம் விட்ட பெருமூச்சு அவள் மனச்சுமையைக் குறைப்பதுபோல் தோன்றியது. நேற்றிலிருந்து அவள் ஒரு நிலையில் இல்லை. நேற்றுக் காலையில் நடந்த ஒரு சிறு நிகழ்ச்சி அவளை எங்கெல்லாமோ தள்ளிவிட்டு வேடிக்கைப் பார்த்தது. நெஞ்சக் கடலின் குமுறும் அலைகளை அவளால் தாங்க முடியவில்லை.

நேற்று அவன் வந்தான். சரியாகக் காலை பத்துமணிக்கு அவளுடைய அறைக் கதவின் வெளியே நின்று புன்முறுவலுடன் கை கூப்பினான். கமலத்தின் நெற்றி சுருங்கியது; கண்கள், உடம்பெங்கும் சிலீரெனப் புல்லரிப்பதை உணர்ந்தாள். எதிரே நிற்பவனின் அந்தக் கண்கள், அந்தப் புருவம், அந்த நெற்றி, அந்தப் புன்னகை; அவன் யார்? அருணாசலமே தானா?

"எங்கள் கல்லூரியின் இலக்கியச் சங்கத்தில் நீங்கள் பேசவேண்டும். நான் சங்கக் காரியதரிசி!"

"உட்காருங்கள்."

பையன் அடக்கத்தோடு நாற்காலியில் வந்து உட்கார்ந்தான். அவனுக்கு இருபது வயசு இருக்கும். நடுத்தர உயரம். நாலுமுழ வேட்டியும் அரக்கைச் சட்டையுமாக இருந்தான். தோற்றத்தில் எளிமை, தெளிவு, உறுதி இத்தனையும் தெரிந்தன.

கமலத்தின் பிரமிப்பு இன்னும் தீரவில்லை. அவசர அவசரமாக அறையின் மறு பகுதிக்குச் சென்று கட்டிலின் கீழே இருந்த பெட்டியைத் திறந்து ஓர் புகைப்படத்தை எடுத்தாள். பழுப்பேறிய பழைய படம். ஆனால் அடிக்கடி துடைத்ததாலோ என்னவோ, படத்தின் உருவம் பளிச்சென்று தெரிந்தது. அதில் இந்தப் பையன் இன்று கதவோரத்தில் வந்து நிற்பதைப் போலவே புன்முறுவலுடன் நேருக்கு நேர் கண்களைச் சந்தித்த வண்ணம் நின்று கொண்டிருந்தான்!

கமலத்தின் கண்களை நீர்த்திரை மறைத்தது. நன்றாக அந்தப் படத்தைப் பார்த்தாள். அங்கிருந்தபடியே கண்களைத் துடைத்துக்கொண்டு பையனையும் பார்த்தாள். வேற்றுமையே இல்லை. படத்தை உள்ளே வைத்துவிட்டுப் பையனிடம் வந்தாள்.

"உங்கள் பெயர் என்ன?"

"நடராஜன். பி. ஏ. முதல் வகுப்புப் படிக்கிறேன்."

"இதுதான் சொந்த ஊரா?"

"போன வருஷம்வரை நாங்கள் ஆந்திராவில் இருந்தோம். தெனாலியில் படித்தேன். இந்த வருஷத்திலிருந்து அப்பாவுக்கு இங்கே மாறுதலாகிவிட்டது."

கமலம் மளமளவென்று இன்னும் சில கேள்விகளைக் கேட்டாள். பதிலும் கிடைத்தது. பிறகு திடீரென்று அந்தப் பையனுக்கு எதிரிலேயே யோசனையில் ஆழ்ந்துவிட்டாள். அவனுக்குக் கமலத்தின் போக்கு ஒன்றும் விளங்கவில்லை. சங்கத்தில் பேச ஒப்புக் கொள்ளாமல் குலம்

கோத்திரம் விசாரிக்கத் தொடங்குகிருளோ என்ற கவலை அவனுக்கு.

"நீங்கள் வந்து பேச ஒப்புக்கொள்ள வேண்டும். உங்கள் பேச்சைக் கேட்க—"

காரியத்தில் கண்ணுள்ள அந்தப் பையனைப் பார்த்துக் கமலம் மெதுவாய்ச் சிரித்தாள்.

"கட்டாயம் வந்து பேசுகிறேன். சரிதானு?"

இடம், காலம், பொருள் முதலியவை பற்றி நாலு வார்த்தைகள் சுருக்கமாய்ச் சொல்லிப் பையன் எழுந்திருக்கப் போனுன். பழக்கமற்ற இடத்தில் அதிகமாகப் பேசுவதற்கு வெட்கப்படுபவன் போல் தெரிந்தது.

"உட்காருங்கள், போகலாம்; அவசரம் ஒன்றும் இல்லையே?"

தயக்கத்தோடு அவன் உட்கார்ந்தான். கமலம் காபி வரவழைத்து அவனைக் குடிக்கச் செய்தாள். அவனுடைய கல்லூரியைப் பற்றி விசாரித்தாள். வேறு எதையோ கொஞ்சம் பேசினுள். கடைசியில் திரும்பவும் குடும்பத்தைப் பற்றியே கேட்கத் தொடங்கினுள்.

அவள் குரலில் ஒலித்த உண்மையான அன்பு அவனை ஆட்கொண்டது. அவனுல் தன் குடும்ப விவரங்களைச் சொல்லாதிருக்க முடியவில்லை. தகப்பனுர் அருணுசலத்திற்கு இப்போது இருநூறு ரூபாய் சம்பளம். அவனுக்கு இரண்டு தங்கைகள், ஒரு தம்பி. பெரிய தங்கைக்குக் கல்யாண வயசு. பத்தாவது வரை படித்துவிட்டு வீட்டில் இருக்கிருள்.

"இருநூறு ரூபாய்தான் சம்பளமா? இதற்குள் இவ்வளவு பெரிய குடும்பத்தை நடத்தியாக வேண்டுமே? குழந்தைகளுக்குப் படிப்பு, பெண்ணுக்குக் கல்யாணம், மற்ற செலவு?..."

நடராஜன் சிரித்தான். "ஒவ்வொரு குடும்பத்துக்கும் இந்த வருமானம் இருந்தால் நம்மிடம் வறுமையே

இருக்காதே! மற்றவர் வாழ்வை உணர முடிந்தால் இது அதிக வருமானந்தான்.''

கமலம் அவன் கண்களை உற்று நோக்கினாள். அதில் ஓர் புதிய ஒளி தெரிந்தது.

''அப்பாவின் மனம் அப்படிப்பட்டது. எங்கள் குடும்பத்திற்கு அவர் நல்ல வழி காட்டுகிறார். ஆடம்பரமாக எங்களுக்கு வாழத் தெரியாது. இதில்கூட ஏதோ கொஞ்சம் மற்றவருக்கு உதவுகிறோம்.''

கமலத்தின் மனம், அப்பாவைப் பற்றி அவன் பேசிய பேச்சை இறுகப் பற்றிக்கொண்டது. எதிரே அவன் இருப்பதை மறந்து யோசனையில் ஆழ்ந்தாள். அவன் நாற்காலியை விட்டு எழுந்து கைகூப்பினான்.

''போய் வரட்டுமா?''

''போய் வா தம்பி; நன்றாய்ப் படித்து முன்னுக்கு வா.''

நடராஜன் திரும்பிப் போகும்போது அவனுக்குக் கமலத்தின் போக்கு விசித்திரமாய்ப் பட்டது. சற்று முன்பு 'வாருங்கள்' என்று மரியாதையாக அழைத்தவள் இப்போது 'போய் வா' என்று ஒருமையில் பேசுகிறாளே! ஆனால் அவன் அதைத் தவறாக எண்ணவில்லை. அவளுடைய அன்பை நினைத்துக்கொண்டே மெதுவாய் நடந்தான்.

## 2

ஜன்னலோரத்தில் உட்கார்ந்திருந்த கமலம் இன்னும் அந்த இடத்தைவிட்டு எழுந்திருக்கவில்லை. கீழ் வானத்தில் செந்நிறத் தீ பற்றிக்கொண்டு எரியத் தொடங்கியது. அந்தக் குளுமையான நெருப்பின் ஜ்வாலையில் அவள் தன்னைப் பற்றிய பழைய காட்சிகள் சிலவற்றைக் கண்டாள்.

கமலத்திற்குப் பன்னிரண்டு வயசு. மணப் பந்தலில் அருணாசலமும் அவளும் பெரிய பெரிய ரோஜா மாலைகளுக்கு மத்தியில் அகப்பட்டுக் கொண்டிருந்தார்கள். கமலம் தலை

நிறைய மல்லிகை வேறு சூடிக்கொண்டிருந்தாள். பூவும் புகையும் நெருக்கடியும் சூழ்ந்த அந்தச் சமயம் அவளுக்கு ஒரே மயக்கமாக இருந்தது. ஆனால் அருகிலிருந்த அருணாசலத்திடம் என்னதான் மந்திரம் இருந்ததோ தெரியவில்லை. அவன் ஒருமுறை திரும்பி, களைப்பு நிறைந்த அவள் முகத்தை உற்றுப் பார்த்தவுடன் அவளுடைய மயக்கம் தீர்ந்தது!

பிறகு தொடர்ந்தாற்போல் ஒரு மாதம் விருந்துகளாக நடந்தன. தனிமையில் சந்திக்கவே அவர்களால் முடியவில்லை. எப்போதாவது நிமிஷநேரம் கிடைத்தால், அருணாசலம் குறும்பாக அவளுடைய நீண்ட சடைப் பின்னலைப் பற்றி 'வெடுக்'கென்று இழுப்பதோடு சரி.

கல்யாணத்துக்குப் பிறகு மூன்று மாதங்கள்கூட ஆகவில்லை. ஒரு சமயம் கமலத்தின் தகப்பனார் அவளைக் கொண்டு வந்து விடுவதற்காகப் புக்ககம் வந்திருந்தார். அப்போது அருணாசலத்தின் தகப்பனாருக்கும் அவருக்கும் பண விஷயமாக ஏகப்பட்ட ரகளை. கமலத்தின் அப்பா தணிந்து போகப் போக அவர் மேலே மேலே போய்க்கொண்டிருந்தார்.

"அதெல்லாம் முடியாது. வெட்கம் மானம் ரோஷம் இருந்தால் சொன்ன சொல்லைக் காற்றில் விடுவீரா? மூவாயிரத்துக்கு முப்பது நாள் பொறுப்பேன். அவ்வளவுதான்! உம்முடைய பெண்ணைப்போல் ஒன்பது பெண் அவனுக்கு!"

அப்பாவும் பெண்ணும் வீட்டை விட்டு வெளியேற்றப் பட்டபோது, அருணாசலம் வந்து குறுக்கே விழுந்தான். அவனைப் பற்றி உள்ளே இழுத்துக் கொண்டு போனார் அவன் தந்தை.

"வேண்டாம், அப்பா! அவளைப் போகச் சொல்ல வேண்டாம்."

"நீ போடா. உள்ளே. நேற்று வந்தவளுக்குப் பரிந்து பேச வந்துவிட்டான்."

'நேற்று வந்தவள்' என்று அன்றைக்குக் கேட்ட சொல்லைக் கமலத்தால் என்றைக்குமே மறக்க முடியவில்லை. நேற்று வந்தவள்தான். தந்தைக்கோ தாய்க்கோ ஒரு குழந்தை போனால் இன்னொரு குழந்தை. கணவனுக்கு ஒரு மனைவி போனால் இன்னொரு மனைவி. ஆனால் அந்த நேற்று வந்தவளுக்கு? நேற்று வந்தவன் அவளை விட்டுவிட்டால் நாளைக்கு அவளுக்கு என்ன வழி? நாள் முழுவதும் அவளுக்கு என்ன வழி? மனிதப் போர்வையில் உள்ள மாபாவிகள் இதை உணரமாட்டேன் என்கிறார்களே!

கமலம் பிறந்தகம் போன முப்பது நாளைக்குள் மூவாயிரம் அவள் தகப்பனாரால் சேர்க்க முடியவில்லை. இந்த நிலையில் அவளுக்கு ஒரு கடிதம் வந்தது. அருணாசலம் எழுதியிருந்தான்:

அன்பார்ந்த கமலம்,

கவலைப்படாதே. கொஞ்சம் பொறுத்திரு. நம் இருவருக்கும் இன்னும் வயசாகவில்லை. அம்மா அப்பாவின் மனம் மாறுகிற வரையில் காத்திருப்போம். இத்துடன் என்படம் அனுப்பி யிருக்கிறேன். நீயும் உடனே உன் படத்தை அனுப்பு. அம்மா அப்பா ஊரில் இல்லை. இரண்டு நாளில் வந்து விடுவார்கள். அதற்குள் பதிலும் படமும் வேண்டும். உன்னைப் படத்தில் பார்த்தாவது என் மனக் கஷ்டத்தை மறக்கப் பார்க்கிறேன்.

உன்னுடைய,
அருணாசலம்.

கமலம் அப்படியே பதிலும் படமும் அனுப்பினாள். பலன்தான் விபரீதமாக இருந்தது. அருணாசலத்தின் தகப்பனாரிடமிருந்து நெருப்புப் பொறி பறக்கும் வகையில் தாறுமாறாக ஒரு கடிதம் வந்தது. கமலத்தைப் பற்றி எவ்வளவு கேவலமாக எழுதலாமோ அவ்வளவும் எழுதியிருந்தார்.

அடுத்த மாதம் கல்யாணப் பத்திரிகையும் வந்தது; அருணசலத்துக்குத்தான்!

ஜன்னலோரத்தில் உட்கார்ந்திருந்த கமலம் பெருகிவந்த கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள். என்றாலும் அந்த ஊற்று வற்றவில்லை. அந்தக் கல்யாணம் நடந்த காலத்தில் அவள் மூன்று நாள் பட்டினியோடு மூலையில் சுருண்டு கிடந்தது இப்போது ஞாபகம் வந்தது.

பிறகு எல்லாம் வெகு வேகமாக நடந்தேறின. கமலத்தின் அப்பாவுக்கு அவளைத் தவிர வேறு யாரும் இல்லை. பையன் ஒருவன் சிறு வயதிலேயே இறந்து விட்டான். மனைவியும் போய்ச் சேர்ந்தாள். கமலத்தைப் படிக்கவைக்க அவர் பட்டபாடு கடவுளுக்குத்தான் தெரியும். அவளுக்கு வேலை வாங்கித் தந்தவுடன், தீராத ஏக்கத்துடன் அவர் கண்ணை மூடும்படி ஆயிற்று.

தனியான பெண் ஒருத்தி மானத்தோடு வெளியே வாழ்வது எவ்வளவு சிரமம் என்பதைக் கமலம் கண்டு கொண்டாள். சந்தர்ப்பங்களின் மத்தியில் அகப்பட்டுக் கொண்டு பின்பு அதற்காக அவள் வருந்த விரும்பவில்லை. கல்லூரியின் ஹாஸ்டல் அவளுக்குப் புகலிடம் அளித்தது; உழைப்பும் புகழும் பொருளும் சேர நல்ல வாய்ப்பைத் தந்தது.

ஆனால் ஒரு பெண் இதனால் மட்டும் திருப்தி அடைந்து விடுவதில்லையே! கடவுள் ஏன் எல்லோருக்கும் ஆசை நிறைந்த நெஞ்சுகளை வேறு கொடுத்திருக்கிறார்? வாழா வெட்டிகளுக்கும் நெஞ்சு, இளம் விதவைகளுக்கும் நெஞ்சு, கல்யாணமாகாமல் கலங்கி நிற்கும் கன்னிகளுக்கும் நெஞ்சு—

கமலமும் தனக்குள்ளாகவே நேருக்கு மாறான பல எண்ணங்களை எண்ணிப் பார்ப்பாள்: 'எத்தனை நாள் இப்படியே சாதிக்கும் சமூகத்திற்கும் பயந்து போய் வாழ்க்கை வாழ்வது? இனியும் அந்தக் கடிதத்தையும் படத்தையும் நம்புவதில் பயன் என்ன? நேரே அருணசலத்

தைத் தேடிப்போய் அவன் முகத்தில் அவற்றை வீசித் திரும்பலாமா? கிறிஸ்தவர்களுடன் சேர்ந்து கன்னியாகி ஏழைகளுக்கும் நோயாளிகளுக்கும் தொண்டு செய்யலாமா? அல்லது முடிந்தால் மறுமணம் செய்துகொண்டு நிம்மதியாய் வாழலாமா?'

ஆனால் அவளால் புரிந்து கொள்ள முடியாத ஏதோ ஒன்று அவள் நெஞ்சைச் சூழ்ந்து கொண்டிருந்தது. அருணசலம் எங்கோ அவளுக்குத் தெரியாத இடத்தில் இருந்து கொண்டு தன்னுடைய நெஞ்சின் வலிமையால் அவளுடைய நெஞ்சில் ஆட்சி செலுத்திக் கொண்டிருந்தான். நினைவுகள் மட்டிலும் ஒன்றை ஒன்று; தழுவி இன்புறும் அதிசய உலகம் ஒன்று இருப்பது, அப்படியானல் உண்மைதானு? கழுத்தில் தொங்கும் மாங்கல்யச் சரட்டை அவள் கடைசியாகக் கவனிப்பாள். வேண்டாத நினைவுகள் போன இடம் தெரியாமல் பொசுங்கி விடும். என்றோ ஒரு நாள் அவன் சடைப் பின்னலைப் பற்றி இழுத்தது அவளுக்கு அப்போது சுரீர் என்று வலிக்கும்.

## 3

சூரிய ஒளி அவள் முகத்தில் படிந்து உள்ளே பாய்ந்தது. அறையில் இருந்த பெட்டி, படுக்கை, புத்தக அலமாரி, மேஜை, நாற்காலி எல்லாம் தெளிவாய்த் தெரிந்தன. படுக்கையை உற்றுப் பார்த்தாள். அதில் அந்தப் படம் கிடந்தது. எழுந்து சென்று திரும்பவும் எடுத்து இன்னொரு முறை சூரிய வெளிச்சத்தில் அதைக் கவனித்தாள். பையனுக்கும் தந்தைக்கும் துளிக்கூட வித்தியாசம் இல்லை. இதே படத்தை வைத்து வார்த்த உயிர்ச்சிலை மாதிரி இருந்தான் அவன்.

அவனுக்குத்தான் அவன் என்ன செய்து விட்டுப் போனுன் என்பதே தெரியாதே! இருபது வருஷமாகக் குமுறிக் கொண்டிருந்த எரிமலையை வெடிக்கச் செய்து

விட்டுப்போன விந்தை அவனுக்கு எப்படித் தெரியும்? ஆம், இருபது வருஷங்களைப் பொறுத்தது பெரிது அன்று. இனி இருபது நிமிஷங்கூட பொறுக்க முடியாது. சித்தம் கலங்கிப் போகுமுன்பே ஒரு முடிவு செய்தாக வேண்டும்.

அந்தப் பையனுடைய தாயின் பெயரை அவள் மறக்க வில்லை. ஆனால் அந்தச் சௌந்திரத்தின் சாயல் அணுவளவேனும் பையனிடம் காணவில்லை. சௌந்தரம் எப்படிப் பட்டவளோ? இவளைப்பற்றி அவள் எதையெல்லாம் எண்ணுகிருளோ? என்ன ஆனாலும் சரி; இன்று அவளைச் சந்தித்தாக வேண்டும்.

அவளை மட்டும் தனியே பார்த்தாக வேண்டும். அவள் தன்னைப்பற்றி என்ன நினைத்தாலும்சரி. வரவேற்ருலும் சரி; திருப்பி அனுப்பினுலும்சரி. மானம், அவமானம், கௌரவம், சுயமரியாதை, எதுவுமே முக்கியம் அல்ல. அவளுடைய வீட்டிற்கு இவள் போகப் போகிருள்!

ஜன்னலை விட்டிறங்கிப் பம்பரமாய்ச் சுழன்று வேலைகளைக் கவனித்தாள் கமலம். பத்துமணிக்கெல்லாம் கல்லூரிக்கு லீவெழுதி அனுப்பிவிட்டு நடராஜன் கொடுத்த விலாசத்தோடு வெளியே புறப்பட்டாள். வழியில் கடைத் தெருவில் துணிக்கடைக்குள் போய் வந்தாள். வெற்றிலை பாக்கும் மல்லிகைச் சரமும் வாங்கிக் கொண்டாள்.

வீட்டின் வெளிக் கதவு உள்ளே தாழிட்டிருந்தது. மெதுவாய்த் தட்டினுள். நெஞ்சின் படபடப்பு அதிகமாயிற்று. கதவை யாரோ திறந்தார்கள். கனிந்த பார்வையும் புன்முறுவலும் ஒன்று சேர அந்தப் பெண்மணி கதவின் பின்னே நின்ருள். அவள்தான் சௌந்தரமோ?

"வாருங்கள்!"

"இது நடராஜனின் வீடுதானே?"

"ஆமாம், உள்ளே வாருங்கள்."

சௌந்தரத்தின் பின்னுல் சென்று அவள் விரித்துப் போட்ட பாயில் உட்கார்ந்தாள் கமலம். சௌந்தரத்தின்

முகபாவம் கமலத்திற்கு நம்பிக்கை ஊட்டியது. கமலத்தை விட அவள் சிறியவள்தான். ஆனாலும் தோற்றத்தில் வயசு அதிகமாய்த் தெரிந்தது. கழுத்தில் ஒரு சங்கிலி, கையில் ஒரு ஜோடி வளைகள், காதில் சிவப்புக்கல் தோடுகள். மஞ்சளும் குங்குமமுமாய்க் குத்துவிளக்குப்போல் இருந்தாள்.

"நீங்கள் வந்து?..." என்று தொடங்கினாள் சௌந்தரம்.

"நானும் நடராஜனின் அம்மாதான்—கமலம்."

"அக்கா!"

இரண்டு கரங்களையும் இறுகப் பற்றிக் கொண்டாள் சௌந்தரம். உணர்ச்சிப் பெருக்கு, தொண்டையை அடைத்தது. கண்ணில் நீர்மணிகள் திரண்டன.

கமலத்தின் முகத்தையே கண்ணிமைக்காது பார்த்தாள். இவள்தானா கமலம்? அதிகப் படிப்பின் அநாகரீக ஆடம்பரம் ஒன்றுகூடக் காணவில்லையே! புகழும் பொருளும் உள்ளவள் என்பதற்கான அடையாளங்கள் சிறிதும் தெரியவில்லையே! பணத்தின் மினுக்கையும் படிப்பின் பகட்டையும் அழித்த பண்புமிக்க வீட்டரசி போலல்லவா இருக்கிறாள்?

"அக்கா நீங்கள்தானா, அக்கா? உங்களை நான் நினைக்காத நாள் இல்லை, அக்கா!"—சௌந்தரத்தின் கண்களில் திரண்ட நீர்மணிகள் கீழே வழிந்தன.

கமலம் திகைப்புற்றுக் கல்லாய்ச் சமைந்தாள். ஒரே கணவனுக்கு வாழ்க்கைப்பட்ட இரண்டு மனைவிகளிடம் இந்த மாதிரி அன்பு நிலவமுடியுமா? சௌந்தரத்தின் உணர்ச்சிப் பெருக்கில் சந்தேகத்திற்கோ, அவநம்பிக்கைக்கோ, போலி நடிப்பிற்கோ இடம் இல்லை. நீண்ட நாள் நினைத்த நெஞ்சின் உணர்ச்சிப் பிரவாகம் இது.

"இருங்கள், இதோ வந்துவிட்டேன்."

சௌந்தரம் உள்ளே எழுந்து ஓடித் தன் மூத்த பெண் கல்யாணியைப் பரபரவென்று இழுத்துவந்தாள். "உன்னுடைய அம்மா வந்திருக்கிறார், பார் கல்யாணி!"

கல்யாணி கைகூப்பி வணங்கிவிட்டு ஒன்றும் புரியாமல் விழித்தாள். கமலத்தின் அருகில் பாயில் வந்து உட்கார்ந்தாள். கல்யாணியின் முகங்கூட கமலத்திற்குத் தன் கணவனைத்தான் நினைவூட்டியது. அப்படியே அவளை வாரி அணைத்து மடிமீது கிடத்திக் கொண்டாள். உள்ளம் அவளைச் சுற்றிப் பிணைத்தது. தலைமயிரை அன்போடு கோதிவிட்டுத் தன் பிடியிலிருந்து அவளை விடுவிக்க மனமில்லாமல் வைத்திருந்தாள்.

''குழந்தைகளுக்கு உங்களைப் பற்றித் தெரியாது. 'காலம் வரும், தெரிந்து கொள்வார்கள்' என்ருர். அந்த நல்ல காலம் வந்து விட்டது.''

''நல்ல காலம் என்று சொல்கிறீர்கள்!''

''வேறென்ன? நல்ல காலந்தான்!''

கமலத்தின் துயரம் நிறைந்த இதழ்களில் சிரிப்புத் தோன்றியது.

''நானுக உங்களைச் சந்திக்க வழிதேடிக் கொண்டிருந்தேன். அதற்குள் தானுக வழி பிறந்தது.''

'வழிபிறந்தது' என்ற சொல் கமலத்தின் நெஞ்சு நரம்பு ஒவ்வொன்றிலும் பாய்ந்தது. அவள் தன் பையிலிருந்த வெற்றிலை பாக்கு புஷ்பத்தை எடுத்துச் சௌந்தரத்திடம் கொடுத்தாள். புடவையையும் ரவிக்கைத் துண்டையும் எடுத்துக் கல்யாணியின் கையில் வைத்தாள். மௌனமாகச் சிறு பொழுது கழிந்தது.

கல்யாணி சமையலைக் கவனிக்க உள்ளே சென்றவுடன் இருவரும் மனம் விட்டுப் பேசத் தொடங்கினர். இருபுறமும் நடந்ததெல்லாம் இருவரும் சொல்லிக் கொண்டார்கள். கமலம் நேற்று நடராஜனைச் சந்தித்தது முதல் அதற்குப் பின்னல் ஏற்பட்ட மனத் தவிப்புவரை ஒன்றுவிடாமல் வெளியிட்டாள். உணர்ச்சி மேலீட்டால் வார்த்தைகள் சில இடங்களில் தடைப்பட்டன.

"இதற்கு மேலும் என்னால் தாங்க முடியவில்லை. புறப்பட்டு வந்தேன். என்ன ஆனாலும் சரி என்றுதான் வந்தேன். என்னை வெளியே தள்ளிக் கதவைச்சாத்தினாலும் சாத்தட்டும் என்று நினைத்தேன்."

சௌந்தரம் கமலத்தின் வாயைப் பொத்தினாள். "இது உங்கள் வீடு, அக்கா; உங்கள் வீடு! நான் இளையவள். உங்களுக்குப் பிறகுதான் நான்."

"உங்கள் வாழ்வில் நான் தலையிடவில்லை. என்னைத் தவறாக நினைக்க வேண்டாம். தூரத்திலிருந்தே உங்களைப் பார்த்துத் திருப்தி அடைகிறேன். இவ்வளவு நாள் நான் தனியாக இருக்கவில்லையா? இன்னும் கொடுத்து வைக்காத எத்தனையோ பேர் என்னைப்போல் வாழவில்லையா?"

"நீங்கள் கொடுத்து வைத்தவர்கள், அக்கா!"

கமலம் பெருமூச்சு விட்டாள்.

"நீங்களும் பெண், நானும் பெண், உங்களுடைய ஆசையும் பாசமும் எனக்குத் தெரியாமல் இருக்குமா? இனியுமா அதையெல்லாம் அழிக்கப் பார்க்கிறீர்கள்? நான் அவ்வளவு சுயநலக்காரி அல்ல, அக்கா."

சிறிது நேர யோசனைக்குப்பின் கமலம் பதிலளித்தாள். "சௌந்தரம், இந்தமாதிரி உயர்வான நினைவுகள் எப்போதாவதுதான் நம்மிடம் ஏற்படுகின்றன. இந்த நிமிஷங்களை மட்டும் நம்பி நாம் எதையும் முடிவு செய்யக் கூடாது. இங்கே நான் வருவதைவிட எனக்கு வேறு எந்த ஆசையுமே இல்லை. ஆனால் ஒருவர் வாழ்வின் வாட்டத்தால் இன்னொருவர் வாழ்வுக்கு மலர்ச்சியா? உங்களுடைய துன்பத்தில் பெறும் இன்பம் எனக்கு வேண்டாம்."

"துன்பமும் இன்பமும் அவரவர் மனத்தைப் பொறுத்தவை. அவருக்கு எது இன்பமோ அதுவே எனக்கு இன்பம். இன்னும் அவர் தம்முடைய வாழ்வில் முழு இன்பம் காணவில்லை."

"என்ன?"

"ஆமாம்; என்னுடன் மாத்திரம் அவர் வாழ்வதாக உலகம் நினைக்கிறது. உண்மையில் அவர் இதுவரை நம் இருவரோடும் வாழ்ந்திருக்கிறார். உள்ளத்தினால் மட்டும் உங்களோடு வாழ வேண்டிய துன்பம் இதுவரை அவருக்கு ஏற்பட்டு விட்டது."

கமலம் தனக்கு எதிரே ஒரு பெண்தெய்வம் இருந்து பேசுவதைப்போல் உணர்ந்தாள்.

"எனக்கு அவரை நன்றாய்த் தெரியும். தாமாக விவரந் தெரிந்து செய்யாத ஒரு பிழைக்கு அவர் தம்மையே குற்றவாளி ஆக்கிக் கொண்டிருக்கிறார். அவருடைய பெற்றோர்களின் கைப் பொம்மையாக முன்பு இருந்தார். இப்போது அவர்கள் கண் மூடிவிட்டார்கள். அவர்கள் செய்ததை நினைத்து இவர் கண்கலங்குகிறார். உங்களுக்கு வாழ்வு கிடைக்காதவரை அவருக்கு மனத் தவிப்பு நீங்காது. அதை அவர் என்னிடம் மறைக்கப் பார்க்கிறார்; முடியவில்லை. நான் அவரைத் திருப்ப முயன்றேன். முடிவில் அவர்தாம் வெற்றி பெற்றார். உங்களைப் பற்றி எனக்கு நினைக்கக் கற்றுக் கொடுத்தவரே அவர்தாம்."

கமலத்திற்குக் கனவா நனவா என்றே புரியவில்லை. ஆனந்தத்தால் நெஞ்சு விம்மி வெடித்துவிடும் போலிருந்தது.

"அக்கா, இந்தச் சிக்கலை நான் முன்பே தீர்க்க முன்வந்து விட்டேன். எல்லோரும் உலகத்தில் இரண்டு பேரோடு வாழ வேண்டாம். ஆனால் வாழவேண்டிய அவசியம் வந்தவர்கள் வாழ்ந்தால் என்ன? உங்கள் நிலைக்கு வேறு என்ன பரிகாரம்? எத்தனை எத்தனை பெண்கள் இப்படிக் கஷ்டப்படுகிறார்கள்? ஒன்றுமே கிடைக்காமல் துன்பப்படுவதற்கு, உள்ள சுகதுக்கங்களைப் பகிர்ந்து அநுபவித்தால் என்ன? நான் முடிவுக்கு வந்துவிட்டேன். ஆனால் அவர் வரவில்லை. அவர் ஆண்பிள்ளை, உணர்ச்சியோடு அறிவையும் சேர்த்து நிதானமாக முடிவு செய்யப் பார்க்கிறார். கொஞ்சம் பொறுங்கள்; இதோ வந்து விட்டேன்."

சௌந்தரம் எதையோ அவசரமாகத் தேடப்போவது போல் எழுந்து உள்ளே போனாள்.

கமலத்தின் கண்கள் அந்த வீட்டைச் சுற்றிப் பார்வையிட்டன. எங்கும் ஒரே எளிமையின் தோற்றம். எளிமையென்று சொல்வதைவிட வறுமை என்றே சொல்லலாம். 'வறுமையில் செம்மை' என்ற வாக்கின் உண்மையை அங்கே கமலம் கண்டாள். துணிமணிகள் சுத்தமாய்க் கொடியில் மடித்துத் தொங்கின. பாத்திரம் பண்டங்கள் ஒழுங்காக அடுக்கப்பட்டுப் பளிச்சென்று தோன்றின. வீடு மட்டிலும் சற்றுப் பெரியது. அறைகளுக்கு முன்னே திரைச் சீலைகள் பின்னித் தொங்கவிட்டிருந்தாள் கல்யாணி.

சௌந்தரம் கையில் ஒரு பழைய கடிதத்துடன் திரும்பி வந்தாள்.

"நாலு வருஷங்களுக்கு முன்பு, நாங்கள் ஆந்திராவில் இருந்தபோது அவர் இந்தப் பக்கம் ஒரு வேலையாக வந்தார். நான் உங்களைக் கட்டாயமாய் அழைத்துவரச் சொல்லியிருந்தேன். ஞாபகப்படுத்தி ஓர் கடிதமும் எழுதினேன். அதற்கு அவர் எழுதிய பதில் இது. என்னவோ எனக்கு இதை வைத்திருக்கவேண்டும்போல் தோன்றியது. வைத்திருந்தேன். படித்துப் பாருங்கள்."

கமலம் படிக்கலானாள்.

## 4

அருணாசலம் எழுதியிருந்தார்.

அன்புள்ள சௌந்தரம்,

கமலத்தை அழைத்து வந்துவிட வேண்டுமென்பதில் நீ பிடிவாதமாய் இருக்கிறாய். என்னுடைய ஆசையும் கடமையும் அதுதான். ஆனால் ஆசை நிறைவேறுவதற்கும் கடமையைக் கவனிப்பதற்கும் இன்னும் காலம் வரவில்லை என்றே நினைக்கிறேன்.

கமலம் இப்போது தன் உழைப்பினுல் உயர்ந்து வருகிருள். உழைப்பின் பலனைக் கல்வி உலகமும் அதன் பிரதி பலனை அவளும் அனுபவிக்கும் சமயம் இது. அவளுக்கு இங்கே நல்ல மதிப்பு; புகழுக்கும் பொருளுக்கும் குறைவில்லை. ஆனுல் அவள் இன்னும் தன் பழைய வழியிலிருந்து மாருமல் இருக்கிருள்.

என் மனம் உனக்குத் தெரியும். பிறரை வாழவிடாமல் தடுத்துப் பாழாக்கும் எந்தக் குறுகிய கொள்கைக்கும் நான் எதிருனவன். இவ்வளவு தூரம் படித்து முன்னேறியவள் தனக்குப் பிடித்த வேருெருவரை மணந்துவாழலாம். எனக்கு ஓரளவு அதனுல் ஆறுதல் கிடைத்திருக்கும். ஆனுல் ஏனே அவள் அப்படிச் செய்யவில்லை. அவளுடைய பெண்மையைக் கண்டு நான் பெருமை கொள்கிறேன். பரம்பரைப் பண்பில் ஊறிப்போனவள் அவள்.

இங்கு வந்து அவளைப்பற்றிக் கேட்டுத் தெரிந்து கொண்ட பிறகு அவளைச் சந்திப்பதற்காக நேரே அவள் கல்லூரிவரையில் போனேன். ஆனுல் உள்ளே போய் அவளைப் பார்க்கவில்லை. வாசல் வரையில் போய்த் திரும்பினேன்.

அவளுடைய நன்மைக்காக என்று எண்ணி நீயும் நானும் செய்யும் காரியம் அவளைப் பொறுத்தவரை நன்மைதானு? அவள் நம்மைத் தவருகப் புரிந்து கொண்டால் என்ன செய்வது? இன்று அவள் நல்ல நிலையில் இருப்பதால் நான் அவளை அழைப்பதாக நினைத்தால் நான் அதை எப்படிச் சகிப்பேன்! இவ்வளவு காலமாக ஒன்றுமே விவரந்தெரியாமல் இருந்துவிட்டுப் பின்பு திடீரென்று ஏற்படும் இந்தச் சந்திப்பால் என்ன விளைவு ஏற்படுமோ?

பணத்திற்கு மனத்தை மாற்றும் சக்தி உண்டு. படிப்புக்குச் சுதந்திர உணர்ச்சி தேடும் துடிப்பு உண்டு. அதிலும் பெண்கள் ஆண்களைவிட அதிகமாய் இந்த ஆதிக்கத்துக்கு உட்பட்டுவிடுவார்கள். காலங்காலமாய் இருட்டறையில் உழன்றவர்கள் திடீரென்று ஒளியைக் காணும்போது ஆரம்பத்தில் இந்த வீபரீதங்கள் நடப்பது இயற்கைதான்.

நாம் இப்போது ஏழைகள்; குழந்தை குட்டிகள் உள்ள குடும்பத்தினர். அவளை அழைத்துவர வேண்டுமென்றால் நான் உன்னுடைய சுகத்தை மாத்திரம் அவளுக்காகத் தியாகம் செய்யச் சொல்லிக் கேட்க முடியாது. அவளும் மற்றவருக்காகத் தியாகம் செய்தே ஆகவேண்டும். இதையெல்லாம் அவள் உணர்வாளா? இதற்குத் தயாராக இருப்பாளா?

வாழ்வைத் தருவதாய் நாம் நினைத்து அவளுக்குத் தாழ்வைத் தரவேண்டாம். காலம் வரும். பொறுத்திருப்போம். கடவுள் கருணை உள்ளவர்.

அன்புள்ள,
அருணாசலம்.

கடிதத்தைப் படிக்கும்போதே கமலத்தால் கண்ணீரை அடக்க முடியவில்லை. துளித் துளியாய் எழுத்துக்களின் மேல் விழுந்து சிதறியது. கடிதத்தை முடித்துவிட்டுக் கண்களைத் துடைத்துக்கொண்டு அவள் பேசினாள். "படிப்புக்கும் பணத்திற்கும் நான் அடிமையாகவில்லை. அன்புக்குத்தான் அடிமை. ஒரு நிமிஷ வாழ்வில் உண்மையான அன்பைப் பெற்றால் போதும். அதற்காக எதையும் இழக்கச் சித்தமாயிருக்கிறேன். படிப்பென்ன, பணமென்ன, உயிரென்ன, எல்லாம் அன்புக்கு முன்னே அற்பமான பொருள்கள்."

"பணத்தைத் தவிர வேறு எதையுமே மதிக்காத குடும்பத்தில் இவர் எப்படித்தான் தப்பிப் பிறந்தாரோ? இவருடன் வேலை பார்த்தவர்கள் ஆயிரம் ஆயிரமாக லஞ்சம் வாங்கிச் சொத்துச் சேர்த்துவிட்டார்கள். நாலு அயோக்கியர்களுக்கு மத்தியில் இவர் நல்லவராயிருந்து கஷ்டப்பட்டதுதான் மிச்சம்."

கமலத்தின் இருதயத்துக்குள்ளே அருணாசலத்தின் உருவம் விசுவரூபம் எடுத்து அணுவளவு இடமில்லாமல்

நிறைந்துகொண்டது. செளந்தரம் இன்னும் பேசி முடிக்கவில்லை.

"அவருடைய தகப்பனர் செய்த கொடுமைக்கு அவர் செய்யப்போகும் பிராயச்சித்தம் இதுதான். பெண்களின் கல்யாணத்துக்குக் காலணுக் காசு கொடுக்கப் போவதும் இல்லை. பிள்ளைக்கு வாங்கப்போவதும் இல்லை. சாதி, குலம், கோத்திரம் கிடக்கட்டும். நல்லவர்கள் எங்கும் இல்லாமலா போகிருர்கள்?"

"செளந்தரம்!"—உணர்ச்சிப் பெருக்கால் கமலம் தடுமாறிஞள்.

"அக்கா! அவர் ஆயிரத்தில் ஒரு மனிதர். நாம் இரண்டு பேருமே கொடுத்து வைத்தவர்கள்."

நேரம் சென்றது. கமலம் அங்கேயே சாப்பிட்டாள். பிற்பகல் ஆயிற்று.

"நான் போய் வரட்டுமா?" என்று எழுந்தாள் கமலம்.

"இனி எங்கே போவது? இருங்கள். அவரும் வந்து விடுவார். குழந்தைகளையும் பார்க்கலாம்."

"இல்லை, செளந்தரம்; இன்றைக்கு இது போதும். இனி என்ஞல் இதற்குமேல் எதையும் தாங்க முடியாது. நெஞ்சு வலிக்கிறது; நாளைக்கு வருகிறேன்."

தன் அறைக்குப்போய்ப் படுக்கையில் குப்புற விழுந்து வாய்விட்டு அழவேண்டும் போலிருந்தது கமலத்துக்கு. தெருவில் வேகமாய் நடந்தாள். நடக்கும்போதே பலவிதச் சிந்தனைகள் அவளைச் சின்னுபின்னப்படுத்தின.

'செளந்தரமும் அவள் குழந்தைகளும் சந்தோஷமாய் வாழும்வாழ்வில் நாம் ஏன் குறுக்கிடவேண்டும்? இந்த ஊரை விட்டே வேறு எங்காவது போய்விட்டால் என்ன? இவ்வளவு நாள் இருந்த நிலையில் இனியும் இருக்க முடியாதா?...இல்லை; இல்லை; அது முடியாது!...ஏன் முடியாது? முடியும்...'

நினைவுகளுக்கு முடிவு ஏற்படவில்லை. ஹாஸ்டலில் வெளி வாசலுக்குள் நுழையப் போனாள்.

"உங்களை ஒரு ஐயா தேடி வந்தாங்க; இதோ கொஞ்ச தூரந்தான் போயிருப்பாங்க" என்று காவற்காரன் ஒரு சீட்டைக் கொடுத்தான். 'அருணாசலம்' என்று எழுதி யிருந்தது.

அந்தப் பெயரைக் கண்டவுடன் அவளுடைய நினைவு களுக்கெல்லாம் ஒரு வழி பிறந்து விட்டது.

"ஓடு! சீக்கிரம் போ! போய்க் கூட்டிவா!"

வெறி பிடித்தவள்போல் தன் அறைக்கு ஓடிக் கதவைத் திறந்தாள். சாய்வு நாற்காலியை இழுத்து முன்னே போட்டாள். நெஞ்சின் படபடப்பைத் தாங்காமல் பயத் தோடு அங்கே கைவைத்துப் பார்த்தாள். 'இன்னும் ஒரே ஒரு நிமிஷம் தாங்க மாட்டாயா?' என்று தனக்குள்ளாகவே அந்த நெஞ்சிடம் கெஞ்சிப் பார்த்தாள்.

கண்ணாடியின் முன்னால் நின்று அவள் தன்னை அழகு பார்த்துக் கொண்டபோது அவள் ஓர் பிரபல ஆசிரியையாக இல்லை. முப்பத்தைந்து வயசான கமலம் எம்.ஏ., எல்.டி. இல்லை. புத்தம் புது மணப்பெண். கனவிலே மட்டும் கண்டு ஏங்கிய காதல் இளைஞனைக் கண்களால் காணத் துடிக்கும் கன்னிப் பெண்.

கதவருகில் செருப்புச் சத்தம் கேட்டுத் திரும்பினாள். அங்கே நாலுமுழ வேஷ்டியும் அரைக்கைச் சட்டையுமாக அருணாசலம் நின்றுகொண்டிருந்தார். மேலே சாதாரணத் துண்டு தோளில் மடித்துக் கிடந்தது. அவர் அப்போது நடராஜனின் அப்பாவைப்போல் இல்லை. வயசில் அண்ணா மாதிரி இருந்தார். இளமை குலையவில்லை; இரும்புச் சிலையா லான தேகம்.

உதட்டில் அவருடைய அந்தத் தனியான புன்சிரிப்பையும் கண்களில் கூர்மையான ஒளிக்கீற்றையும் கமலம் கண்டாள். அவளுடைய உதடுகள் துடித்தன. தொண்டை அடைத்துக்

கொண்டது. பேச முடியவில்லை. 'வாருங்கள்' என்று அழைக்கக் கூட முடியாமல் தவித்தாள்.

தாமாக வந்து அவர் நாற்காலியில் உட்கார்ந்தார். அவர் காலடியில் புயலால் அறுபட்ட பூங்கொடியாக அவள் அறுந்து விழுந்தாள். அவருடைய முழங்காலில் தலையைச் சாய்த்துக்கொண்டு அழுதாள். நீண்ட நேரம் விம்மினாள்; தேம்பினாள்; விக்கினாள்; பெருமூச்சு விட்டாள். அவளுடைய தலையிலும் வெதுவெதுப்பான நீர்மணிகள் சொட்டிக் கேசத்தின் இடுக்கு வழியே புகுந்தன.

அடுத்த நாள் அவள் தன் அறையைக் காலிசெய்து கொண்டு அருணாசலத்தின் பின்னால் புறப்பட்டபோது மற்ற ஆசிரியைகளுக்கு ஒன்றும் புரியவில்லை. சிலருக்கு வியப்பு, சிலருக்கு விசித்திரம், சிலருக்குக் கேலியும் பரிகாசமும்... பெருமை கொண்ட சிலரும், பொறாமை கொண்ட சிலரும், அவர்களில் இருந்தார்கள். ஆனால் கமலம் அவர்களில் யாருடைய உணர்ச்சியையும் சட்டை செய்யவில்லை.





## அகிலனின் நாவல்கள்

| | ரூ. | பை |
|---|---|---|
| சித்திரப்பாவை (பாரதீய ஞானபீடப் பரிசு பெற்றது) | 15 | 00 |
| வேங்கையின் மைந்தன் (சாகித்ய அகாதமி பரிசு பெற்றது) | 22 | 00 |
| கயல்விழி (தமிழ்நாடு அரசின் பரிசு பெற்றது) | 15 | 00 |
| நெஞ்சினலைகள் (தமிழ் வளர்ச்சிக் கழகப் பரிசு பெற்றது) | 8 | 00 |
| எங்கே போகிறோம்? (ராஜா சர் அண்ணாமலை இலக்கியப் பரிசு பெற்றது) | 11 | 00 |
| பால்மரக்காட்டினிலே... | 6 | 75 |
| வெற்றித் திருநகர் | 15 | 00 |
| பாவை விளக்கு | 20 | 00 |
| புதுவெள்ளம் | 15 | 00 |
| வாழ்வு எங்கே? | 11 | 00 |
| பொன் மலர் | 4 | 00 |
| சிநேகிதி | 4 | 50 |
| கொள்ளைக்காரன் | 2 | 00 |
| சந்திப்பு | 1 | 50 |
| அவளுக்கு | 1 | 75 |

## அகிலனின் சிறுகதைத் தொகுதிகள்

| | | |
|---|---|---|
| விடுதலை | 2 | 75 |
| பசியும் ருசியும் | 3 | 50 |
| சத்திய ஆவேசம் | 5 | 00 |
| எரிமலை (தமிழ்நாடு அரசின் பரிசு பெற்றது) | 4 | 50 |
| குழந்தை சிரித்தது | 4 | 50 |
| நெல்லூரர் அரிசி | 6 | 00 |
| சக்திவேல் | 5 | 00 |
| நிலவினிலே | 3 | 50 |
| ஆண்—பெண் | 3 | 50 |
| செங்கரும்பு | 3 | 00 |
| மின்னுவதெல்லாம் | 5 | 00 |
| கதைக்கலை (கட்டுரை) | 5 | 00 |
| சோவியத் நாட்டில் ( ,, ) | 4 | 00 |
| வாழ்வில் இன்பம் (நாடகம்) | 5 | 00 |

---

# பாரி புத்தகப் பண்ணை

**சென்னை—5**